111

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – புரட்டாசி
2021 – செப்டம்பர்

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில்
முதலாம் ஆண்டு மாணவர்களுக்கு வகுப்புகள் தொடக்க விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


பிலவ – புரட்டாசி

2021 – செப்டம்பர் இதழ் – 111



சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


### பொருளடக்கம்




தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

**சுந்தர மூர்த்தி நாயனார்**

தினமட மாதர் போகம் முதலிய செயினும் தீங்கின்

மனம்ஒரு நிலையே நிற்பின் என்பது வயக்கி யாங்குக்

கனமணிக் குழன்மின் னார்ஓர் இருவரைக் கலந்து நாளும்

அநகஇன் பத்து நீங்காது அமர்பவர்க்கு அன்பு செய்வாம்.

*– கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

ஏறக்குறைய இரண்டு கல்வி ஆண்டுகள் நம்முடைய மாணாக்கர்கள் பள்ளிக்கு வராமலேயே இணைய வழியிலே கற்று, இணைய வழியிலே தேர்வு எழுதி, இணைய வழியிலே மதிப்பெண்கள் தரப்பட்டு, அடுத்த வகுப்பிற்குத் தேர்ச்சி பெற்றுள்ளனர். இந்த இணைய வழிக் கல்வி, இணைய வழித் தேர்வு இரண்டுமே முழுமையான பயன் தரவில்லை என்று நம்முடைய மாணவர்களும், ஆசிரியர்களும் அபிப்பிராயப் படுகிறார்கள், வருந்துகிறார்கள். இந்தச் சூழ்நிலையில் கடவுள் அருளாலே பள்ளிகள், கல்லூரிகள் திறக்கப்பட்டு ஒன்பது, பத்து, பதினொன்று, பன்னிரண்டு ஆகிய நான்கு வகுப்பு மாணவர்கள் நேரடியாகக் கற்க, பள்ளி, கல்லூரிகளுக்கு வரலாம் என்று கல்வித்துறை அனுமதி அளித்திருக்கிறது. அவர்களுக்கு நம்முடைய நன்றி.

செப்டம்பர் முதல் தேதி நம்முடைய கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேனிலைப் பள்ளி நான்கு வகுப்பு மாணவர்களுக்கும் எட்டு வகுப்பறைகள் தயார் செய்து சமூக இடைவெளியுடன் மாணவ, மாணவியரை அமரவைத்து வகுப்புகள் சிறப்பான முறையிலே நடத்தப்பெற்று வருகின்றன. நம்முடைய பள்ளி ஆசிரியப் பெருமக்களை விசாரித்த அளவிலே, மாணவர்கள் உற்சாகமாகவும், அதிக கவனத்துடனும் பாடங்களைக் கவனிக்கிறார்கள்; கிரகிக்கிறார்கள் என்று மகிழ்வோடு கூறுகிறார்கள். அவர்களும் தொடர்ந்து ஆர்வத்துடன் பாடங்களைக் கற்பிக்கிறார்கள்.

கல்லூரி அளவிலே இரண்டாம் ஆண்டு, மூன்றாம் ஆண்டு படிக்கின்ற மாணவர்களுக்குக் கற்பிப்பதற்காகக் கல்லூரிகள் திறக்கப்பட்டு உள்ளன. ஆனால் ஒரு நாளில் ஒரு வகுப்பிற்கு (இரண்டாம் ஆண்டு அல்லது மூன்றாம் ஆண்டு) நடத்தப்படுகின்றது. இதனால் ஒரு வகுப்பிற்கு மூன்று நாட்கள் மட்டுமே கல்வி கற்பிக்கப் படுகிறது. மற்றவை இணைய வழியிலே நடத்தப் பெற்று வருகின்றன. இதனால் மாணவர்களுக்குக் கற்பதில் சிரமம் ஏற்படுகிறது.

உண்மையில் பாதியளவே கற்கமுடிகிறது. அந்த அந்தப் பருவத்தின் பாடங்களை முழுமையாகக் கற்பதும், கற்பிப்பதும் இயலாத காரியம் ஆகின்றது. அதே சமயம் ஆசிரியப் பெருமக்கள் நேர்முக வகுப்பு, இணைய வழி வகுப்பு என ஆறு நாட்களும் உழைக்க வேண்டி உள்ளது. இதனாலே கற்பதில் அளவுக் குறைவும், தரக்குறைவும் ஏற்பட அதிக வாய்ப்பு உண்டு.

இவற்றை எல்லாம் மனதில் கொண்டு கல்லூரி ஆசிரியப் பெருமக்களும், பள்ளி ஆசிரியப் பெருமக்களும் அதிக ஈடுபாடும் உழைப்பும் ஈந்து மாணவர்களுக்கு முழுமையான தரமான கல்வியைக் கற்பிக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறோம்.

மேலும் ஆசிரியர்கள் முன் மாதிரியாக இருந்து மாணவர்களை ஒழுக்க நெறிமுறையிலும் கல்வி கற்பதிலும் வழி நடத்தி வெற்றிபெறச் செய்ய வேண்டும். ஆசிரியப் பெருமக்கள் மாணவர்கள் ஆர்வத்தைத் தூண்டி அவர்கள் கல்வித் தரத்தை உயர்த்தும் வண்ணம் சிறந்த மாணவனாக உருவாக்க முடியும் என்பதற்கு, நம்முடைய வளாகத்திலேயே நாம் நடத்திய திருக்குறள், திருப்புகழ் வகுப்புக்கள் இரண்டும் மிக உன்னதமான முறையிலே நடந்தன, நடைபெற்று வருகின்றன.

திருக்குறள் வகுப்பில் பதின் மூன்று அதிகாரம்

1. கடவுள் வாழ்த்து
2. வான் சிறப்பு
3. அன்புடைமை
4. இனியவை கூறல்
5. செய் நன்றி அறிதல்
6. ஒழுக்கமுடைமை
7. கல்வி
8. கல்லாமை
9. கேள்வி
10. அறிவுடைமை
11. வாய்மை

ஆகிய நூற்றுப்பத்துப் பாடல்களும் குழந்தைகள் நன்கு கற்றுத் தேறி அறுபது குழந்தைகளும் நூற்றுப்பத்து திருக்குறள்களையும் உச்சரிப்புப் பிழை இல்லாமல் ஒப்புவித்துச் சான்றிதழ் பெற்றனர். பரிசுகளும் அளிக்கப்பட்டன. இதனை நம்முடைய கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேனிலைப் பள்ளி ஆசிரியை M.வள்ளியம்மை அவர்கள் மிகச் சிறப்பாகக் கற்றுத் தந்தார்கள். அவர்களுக்கு நம்முடைய நன்றிகள், பாராட்டுகள்.

திருப்புகழ் வகுப்பு கடந்த ஜனவரி 2021 முதல் தொடங்கப் பெற்றுள்ளது. இதனை இணைய வழியில் Zoom App மூலம் துபாய் நகரில் இருந்து நம் நண்பர் ஆடிட்டர் சுப.மெய்யப்பன் அவர்கள் வெள்ளிக்கிழமை தோறும் மதியம் மூன்று மணி முதல் திருப்புகழ் படிக்கவும், பாடவும் கற்பித்து வருகிறார்கள். இந்தப் பயிற்சி வகுப்புகளிலே நாற்பது குழந்தைகள் கலந்து கொண்டு கற்கிறார்கள். இவற்றிற்கு இணைப்பாளராக நம்முடைய கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி கணினி ஆசிரியர் திருமதி. பாண்டிமுத்து செயலாற்றுகிறார்கள். திரு. மெய்யப்பன் அவர்களும், திருமதி.பாண்டிமுத்து அவர்களும் இணைந்து மழலைச் செல்வங்களுக்கு அருமையாகக் கற்றுத் தருகிறார்கள். திரு. சுப.மெய்யப்பன் அவர்கள் அந்த அந்த வாரம் நடத்தப் போகின்ற திருப்புகழ்ப் பாடல்களைச் சீர் பிரித்துப் படிப்பதற்கு எளிமையாக Whatsapp மூலம் மாணவர்களுக்கு அனுப்புகிறார்கள். பிறகு சந்தம் தவறாமல் உச்சரிப்புப் பிழை இல்லாமல் அழகாகச் சந்த நயத்தோடு பாடச் சொல்லிக் கொடுக்கிறார்கள். குழந்தைகளும் அவரைத் தொடர்ந்து அவரைப் போலவே பாடக் கற்கிறார்கள். கற்றுத் தெளிந்து நன்றாகப் பாடுகிறார்கள். திருமதி. பாண்டிமுத்து அவர்கள் அந்த வாரம் சொல்லிக் கொடுக்கப்பட்ட பாடல்களை ஞாயிறு அல்லது திங்கட்கிழமை மூன்று மணி அளவில் பயிற்சி வகுப்புகள் நடத்தித் திரும்பவும் குழந்தைகளைப் பாடச் சொல்லித் தவறுகளைக் களைந்து பாட வைக்கிறார்கள்.

இந்தத் திருப்புகழ் வகுப்புகளிலே ஏறக்குறைய பத்துக் குழந்தைகள் உன்னதமாக, பெரியவர்களே வியக்கும் வண்ணம் அருமையாகப்

பாடுகிறார்கள். இவை அனைத்திற்கும் ஆசிரியகளுடைய ஆர்வமும் உழைப்புமே காரணம். வகுப்புகளை நடத்துகின்ற ஆடிட்டர் உயர்திரு. சுப.மெய்யப்பன், அவருடைய மனைவியார், குழந்தைகள் அவருக்குத் துணையாகச் செயல்பட்டு வழிநடத்தி, குழந்தைகளின் ஆர்வத்தையும், திறமையையும் குழந்தைகளுக்கு ஊட்டுகின்றனர். சுப.மெய்யப்பன் குடும்பத்திற்கும் திருமதி. பாண்டிமுத்து அவர்களுக்கும் பாராட்டுகள், ஆசீர்வாதங்கள்.

இது போல் அனைத்து ஆசிரியர்களும் நல்ல பல திட்டங்களை உருவாக்கி வளர்த்து மாணவர்கள் அறிவையும் ஒழுக்கத்தையும் உன்னத நிலைக்குக் கொண்டு வரவேண்டும் என்று விரும்புகிறோம். முயற்சி செய்வீர்களாக.

ஆசீர்வாதங்கள்!

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

## மகாராஜா துறவு

### சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

### பாடல் - 11

**ஆலயம் சாலை அக்கி ராரம்நந் தவனங்கள்**
**கோலம்ஆர் இலஞ்சி கூபம் குளம்பல செய்தும் ஈரெட்டு**
**ஏலும்மா தானத் தோடே இரணியம் முதல்ஈர் ஐந்து**
**சாலநல் தானம் ஈந்தும் தருமம்எண் நான்கு செய்தும்.**

**பொழிப்புரை :**

மகப்பேறு வேண்டி மன்னர் மன்னன் தேவாலயங்கள் பலகட்டிப் பக்தர்களுக்கு அளித்தார். அத்துடன் அறச்செயல்களான நிழல் தரும் மரங்களைச் சாலையின் இருபுறமும் வளர்த்துப் பயணிகளுக்கு அளித்தார். நீண்ட நெடுஞ்சாலைகள், மக்களுக்குப் பெரிதும் உதவுகின்ற நீர்நிலைகள், கிணறுகள், அந்தணர் இல்லங்கள், நந்தவனங்கள் ஏற்படுத்தி மக்களுக்கு அளித்தார். குமாரதேவ மன்னர் பொன் தானம் முதலிய பத்து வகை தானங்களும் வேண்டியவர்க்கு வேண்டிய அளவு கொடுத்தார். பதினாறு வகை தானங்களும், முப்பத்திரண்டு வகை அறங்களையும் முறை தவறாது செய்தார்.

### பாடல் - 12

**தவம்பல புரிந்தும் வேந்தன் தனயனைப் பூத்துப் பின்னர்**
**பவந்தனைத் துடைத்தேன் மேலாம் பரமநல் பதம்உண்டு என்றே**
**உவந்துசா தகன்மத் தோடு ஒழிவுஅற கருமம் எல்லாம்**
**நவம்தரச் செய்து நாமம் நன்மகாராசன் என்றே.**

**பொழிப்புரை :**

பல்வகையான தருமங்களைச் செய்தும் பலகாலம் மன உறுதியோடு தவங்கள் இயற்றியும் அனைத்து நற்காரியங்களின் பயனாக ஆண் மகவு ஒன்றை அடைந்தான். மகப்பேறு இல்லாத பாவம் தன்னைச் சாராமல் காத்துக் கொண்டார். பிதுர் காரியங்களை இயற்றுவதற்கு ஆண் வாரிசு ஒன்று வந்து விட்ட படியினால் தனக்குப் பரமபதம் கிட்டும் என்று நம்பிக்கை கொண்டார். பிறந்த குழந்தைக்கு ஜாதகம் கணித்தல், பெயர் சூட்டல், காதணி விழா முதலிய சடங்குகள் அனைத்தையும் யாவரும் வியக்கும் வண்ணம் விமரிசையாகச் செய்து நல்ல மகாராஜன் என்ற பெயரை அடைந்தார்.

## பாடல் - 13

**வேத நீதியில் கூறி வியன்தர**
**ஓத எண்எண் கலையும் உணர்த்துவித்து**
**ஏதம் அற்ற குரவற்கு இரணியம்**
**போதும் என்னப் பொழிந்தனன் கொண்டல்போல்.**

**பொழிப்புரை :**

கல்வி கற்கும் வயதை மகாராஜனுடைய தவப்புதல்வன் எய்திய காலத்தில் தக்க குருமார்களைக் கொண்டு அரசகுடும்பத்தில் பிறந்த மகன் கற்க வேண்டிய அனைத்துக் கலைகளையும் முன்னோர் சொன்ன நெறிமுறைப்படி கற்பிக்க ஏற்பாடு செய்தார். அவ்வாறே கலைகள் அறுபத்து நான்கினையும் கற்பித்து, புதல்வனைப் பக்குவப்படுத்திய குருமார்களுக்கு அவர்கள் மனம் நிறைந்து மகிழும் வண்ணம் பொன்னும் மணியும் குருதட்சணையாக மகாராஜா அளித்தார்.

## பாடல் - 14

**கொடிநெ ருங்கும் கொடிஞ்சிஅம் தேர்பரி**
**கடம்ம லிந்த கயம்ஒண் சிவிகைஇப்**
**படியில்ஊ ரப்ப யிற்றுவித்து ஆசுஇலா**
**வடிவுஇ லங்கு மகற்கு மணம்செய்வான்.**

**பொழிப்புரை :**

அடுத்ததாக மன்னர்குல மைந்தர்கள் கற்க வேண்டிய தேர் ஏற்றம், தேர் செலுத்துதல், குதிரை ஏற்றம், யானை ஏற்றம் என அனைத்து விதமான போர்க்களப் பயிற்சிகளையும் கற்றுத் தந்தார். அனைத்துக் கல்விகளையும் பயிற்சிகளையும் பெற்று அறிவொளி வீச, வளர்த்த மகனுக்குத் திருமணம் செய்ய விரும்பினார். அன்றைய நெறிமுறைப்படி ஆண்களுக்குப் பதினாறு வயதிலும், பெண்களுக்குப் பன்னிரண்டு வயதிலும் திருமணம் செய்வது மரபாக இருந்தது. அதுபோலவே கர்நாடக மன்னரும் தனது புதல்வருக்குத் திருமணம் செய்ய ஆசைப் பட்டார்.

## பாடல் - 15

**மடங்கல் அன்ன பலம்உள்ள மாமன்னன்**
**இடங்கொள் எண்ணெமு தேசத்து இறைவர்க்கு**
**முடங்கொல் போக்கினன் கண்டு முடிமன்னர்**
**தடம்கொள் சேனைகள் சூழ்வரச் சார்ந்தனர்**

**பொழிப்புரை :**

ஆண்சிங்கம் போன்று உடல் வடிவமும், வீரமும் கொண்ட மன்னர் கர்நாடகத்தைச் சுற்றி இருந்த ஐம்பத்தாறு தேச மன்னர்களுக்கும் திருமண ஓலை அனுப்பினார். அவ்வோலையின் செய்திப்படி அனைத்து மன்னர்களும் தங்களுடைய பெரும்படை சூழ மாபுரம் என்னும் மாநகரை வந்து சேர்ந்தார்கள்.

## பாடல் - 16

**வடிகொள்வெண் சுதையால் பித்திகை தீற்றி**
**வான்உற மணிக்கொடி நிரைத்துக்**
**கடிநறும் சாந்தம் குங்குமம் தன்னால்**
**கமழ்தர மறுகுஎலாம் மெழுகிப்**
**பொடிகொள்சிந் துரத்தால் கோலமே புனைந்து**
**பூமலர் பொரிநனி சிதறிக்**
**கொடிகொள்மூது எயில்மேல் மாடமொண் சிகரி**
**கோதுஅறப் புதுக்கியே குலவ**

**பொழிப்புரை :**

நகரில் உள்ள அனைத்து மாந்தர்களும் தங்கள் இல்லச் சுவர்களை வடிகட்டித் தூய்மை செய்யப்பட்ட சுண்ணாம்பினால் தீற்றி அதன் மேல் பலவிதமான வண்ண ஓவியங்களை எழுதி அழகு செய்தார்கள். மேலும் வண்ணநிறப் பட்டுத் துகிற்கொடிகள் வரிசையாக நாட்டி வீதிகளை அலங்கரித்தார்கள். சந்தனத்தாலும், குங்குமத்தாலும், செந்தூர வண்ணப் பொடிகளாலும் தெருக்களெல்லாம் மணம் வீசும் வண்ண வண்ணப் பொடிகளால் கோலமிட்டு அழகிய மலர்களையும், அரிசி, அவல் பொரிகளையும் கலந்து எங்கும் தூவி அழகு படுத்தினர். கொடி பறந்த கோட்டை மதில்களையும், மேல் மாடங்களையும் ஒளி கொண்ட கோயில் கோபுரங்களையும் ஒளி வீசும் வண்ணம் புதுப்பித்தார்கள்.

### பாடல் - 17

கதலியும் கமுகும் நட்டுக் காவணம் அலங்க ரித்துப்
புதியதோ ரணங்கள் கட்டிப் பொற்குடம் செறித்துத் தீபம்
இதம்உற எங்கும் வைத்தே இந்திர நகரம் போல
மதுமலர்த் தாமம் நாற்றி மாபுரி அலங்க ரித்தார்

பொழிப்புரை :

வீடுகள் தோறும் வீதிகளின் இருபக்கமும் வாழை மரங்களையும், பாக்கு மரங்களையும் நாட்டி சிங்காரப் பந்தல்களை அமைத்து அலங்காரம் செய்து அழகிய தோரணங்களைத் தெருவெல்லாம் கட்டி, பொன்னாலான நிறை குடங்களை வீட்டின் எதிரே வைத்து மங்கல விளக்குகள் ஏற்றி வண்டுகள் மொய்க்கும் புதுமலர் கொண்டு தொடுத்த மாலைகளைத் தொங்கவிட்டு மாபுரி நகரை இந்திரபுரியாக, அமராவதி நகராக அழகுபடுத்தி மகிழ்ந்தனர்.

### பாடல் - 18

வில்இ லங்குகை வேந்தர் மரபினில்
நல்ல சாமுத் திரிகநூல் நன்கதாச்
சொல்இ லக்கணத் தோடு துரிசுஇலா
முல்லை மாலை முருகு விரியவே

பொழிப்புரை :

வில்லும் வேலும் ஏந்திப் போரிட்டதால் வலிமை பொருந்திய ஒளி வீசுகின்ற கரங்களைக் கொண்ட மன்னரின் மரபில் உதித்த அனைத்து நற்குணங்களும், சாமுத்திரிகா இலட்சணமும், பேரழகும் கொண்ட இளவரசி, மணமகள் கோலம் பூண்டு சபைக்கு வந்த பொழுது அவள் அணிந்திருந்த முல்லைமலர் மாலைகளின் நறுமணம் மன்றம் எங்கும் பரவியது.

### பாடல் - 19

மூவுலகு அதனில் உள்ள
முகிழ்முலை கருங்கண் செவ்வாய்ப்
பாவையர் எழிலில் போதன்
பகுத்துஎடுத்து உயிரோடு ஏய

ஓவியம் தீட்டி னான்என்று
உலகினில் உரைக்கச் செய்ய
பூஉறை திருவி ரும்பும்
பொற்புடன் அவதரித்தே

பொழிப்புரை :

மணமகளாகிய அந்த இளவரசி பிரம்மனுடைய படைப்பிலே தோன்றிய அனைத்துப் பேரழகினையும் ஒன்று திரட்டி அந்தப் பெண்ணை சிருஷ்டித்தாரோ என வியக்கும் வண்ணம் அழகுப் பதுமையாக இருந்தாள். அரும்பு போன்ற தனங்களையும், சிவந்த இதழ்களையும் உடைய மணப் பெண்ணைக் கண்டு செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளே வியந்தாள்.

பாடல் - 20

இலங்கிய ஆல்ஒண் தளிர்குழைத்து இனிய
இருதனம் கோங்குஇணை அரும்பி
நலம்கிளர் ஆம்பல் குமிழ்இரு குவளை
நண்ணுசெம் சரோகரும் பூத்துத்
துலங்கிய புயலைச் சுமந்துஇரு தாளால்
தோம்இலா மின்என நுடங்கிப்
பலம்தரப் படரும் கொடியினை வேதப்
பண்பினின் மன்றல்செய் வித்தே

பொழிப்புரை :

ஒளி வீசுகின்ற ஆலிலையின் தளிர் போன்ற வயிறையும், கோங்கின் அரும்புகளே இரு தனங்களாகவும், செவ்வரி மலரே இதழ்களாகவும் குமிழ்ப்பூவே மூக்காகவும், கருங்குவளை மலர்களே கண்ணாகவும், மலர்ந்த தாமரை மலரே முகமாகவும், கருமேகமே கூந்தலாகவும், இல்லையோ எனும்படி மின்னலே இடையாகவும் அசைந்து வந்த அரசிளங்குமரியை முறைப்படி தன் மகனுக்கு மணம் செய்வித்தார்.

*(தொடரும்...)*

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### குகன்

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

வால்மீகி இராமாயணத்திலே தசரதச் சக்கரவர்த்தி கைகேயியின்பால் எழில், வீரம், தைரியம் ஆகியவற்றைக் கேள்விப்பட்டு, கேகேய மன்னனிடம் தான் அவருடைய புதல்வியை விரும்புவதாக வேண்ட, கேகேய மன்னன் தசரதரிடம் ஒரு நிபந்தனையுடன் ஒப்புக் கொண்டார். என் புதல்வி கோசல நாட்டிற்குப் பட்டமகிஷி ஆக ஏற்கப்பட வேண்டும் என்று நிபந்தனை விதித்தார். தசரதச் சக்கரவர்த்தி தன் காதல் மயக்கத்தில் ஒப்புக் கொண்டார். இது வால்மீகி இராமாயணத்திலே சொல்லப்படுகிற செய்தி. இதன்படி பார்த்தால் கைகேயி பட்டமகிஷி என்றால் பரதன் பட்டத்திற்கு உரிய இளவரசன் என்பது இயல்பாக ஒப்புக் கொள்ள வேண்டும். ஆனால் தசரதச் சக்கரவர்த்தி மந்திரி பிரதானிகள் ஆலோசனைக் கூட்டத்தில் மூத்தவன் இராமனுக்கே தாம் பட்டம் சூட்ட விரும்புவதாகக் கூறி அவையோருடைய ஒப்புதலைப் பெற்று இராமருக்குப் பட்டாபிஷேகம் என்று முடிவு செய்து பொது மக்களுக்கு அறிவிக்கின்றார். இது வால்மீகி இராமாயணத்தில் தசரதன் கேகேய மன்னருக்குக் கொடுத்த நிபந்தனையை மீறிய செயலாகும். தசரதன் வாக்குத் தவறியவன் ஆகிறான்.

இந்தத் தர்ம சங்கடமான நிலையைத் தசரதச் சக்கரவர்த்திக்குக் கம்பர் உருவாக்க விரும்பவில்லை. எனவே கம்ப ராமாயணத்தில் கேகேய மன்னனுக்குத் தசரதர் வாக்குறுதி கொடுத்த நிகழ்ச்சி பதிவு செய்யப்படவில்லை. கம்பர் தசரதரைச் சத்தியவந்தராகவே படைக்கின்றார். நாம் மேலே சொன்ன வால்மீகி இராமாயண நிகழ்ச்சி கொண்டு பார்த்தால் கைகேயி பிழை செய்தவள் அல்ல, தசரதரே பிழை செய்தார் என்று கொள்ள வேண்டிவரும்.

தசரதச் சக்கரவர்த்தியின் மற்ற இரண்டு அரசிகளும் ஒன்று கூடித் திருக்கோயில்களுக்கும், விசேஷங்களுக்கும் சென்று வந்ததாகக் கம்பர் குறிப்பிடுகின்றார். இதனைக் கொண்டு ஆராய்ந்தால் கைகேயினுடைய ஸ்தானம் சற்றே உயர்ந்ததாக இருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

கைகேயி, இராமர் காட்டிற்குச் சென்றதற்கும், தசரதர் உயிர் நீப்பதற்கும் காரணமாக அமைந்தாள் என்பது முற்றிலும் உண்மை; எனவே அவளுடைய நற்குணத்திரிபு காரணம். ஆனால் அந்தக்குண மாற்றத்திற்கு மந்தரையே காரணம். அந்தக்குண மாற்றத்தால் ஏற்பட்ட பின் நிகழ்ச்சிகளாலும் பரதனுடைய பாராமுகத்தாலும் மற்றவர்களுடைய ஒதுக்கி வைத்தலாலும் கைகேயி தான் செய்த பாவத்திற்கு அந்தப் பிறவியிலேயே சிரமங்களைப் பெற்று, பிராயச்சித்தம் செய்து தூயவளாக மாற்றம் பெற்றாள் என்றே நாம் கொள்ள வேண்டும்.

அயோத்தியா காண்டத்திலே இன்னும் ஒரு பாத்திரம் குகன் என்னும் சிருங்கபேரித் தலைவர் ஆயிரம் படகுக்குச் சொந்தக்காரன் குகன் என்னும் வேடர் தலைவன். அயோத்தியா காண்டம் குகப்படலத்தில் இராமரால் நான்காவது தம்பியாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பாக்கியசாலி. கம்பராமாயணத்தில் மேலும் இரண்டு தம்பியரை அவர்கள் ஆத்மார்த்தமான தொண்டினாலே இராமபிரான் தம்பியராக ஏற்றுக் கொண்டார். அவர்கள் சுக்ரீவனும், விபீஷனனும் ஆவார்கள். அயோத்தியா காண்டத்தில் நான்காவது தம்பி குகன், கிஷ்கிந்தா காண்டத்தில் ஐந்தாவது தம்பி சுக்ரீவன், யுத்த காண்டத்தில் ஆறாவது தம்பி விபிஷனன். இவர்கள் இராம இலக்குவன் இருவருக்கும் சகோதரர்கள் ஆனார்கள். குகன் அயோத்தியா காண்டத்திலே இராமரைத் தரிசித்துப் பணியாளனாகத் தன்னை ஆக்கிக் கொண்டான். அவனுடைய பணி ஆரண்ய காண்டத்திலே தொடர்வதால் நாம் குகன் என்னும் பாத்திரத்தை ஆரண்ய காண்டத்திலே சிந்திப்போம். மூன்று தம்பியர்களிலும் மூன்று பேரும் தாங்கள் செய்த தொண்டிலும், நட்புணர்விலும் முழுவதுமாக வேறுபட்டுக் காணப்படுகின்றனர். பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்களுடைய உணர்வு அறிவு பக்குவ நிலைகள் கொண்டு பக்தன், கர்ம வீரன், ஞானி என்று பகுத்து அறிந்து தெரிவிக்கிறார்.

**குகனொடும் ஐவரானோம் முன்பு பின் குன்று சூழ்வான்**
**மகனொடும் அறுவர் ஆனோம் எம்முழை அன்பின் வந்த**
**அகன் அமர் காதல் ஐய ! நின்னொடும் எழுவரானோம்**
**புகழ் அரும் கானம் தந்த புதல்வரால் பொலிந்தான் உந்தை**

குகன் வாழ்வியலில் அதிகம் கல்வி அறிவு இல்லாத வேட்டுவன், படகோட்டி, அதனாலே அவன் தன் உள்ளத்து உணர்வு காட்டுகின்ற வழியில் செல்வோம். இராமரைத் தரிசிக்கக் கங்கைக் கரையில் பர்ணசாலைக்கு மீனும் தேனும் கொண்டு வந்தவன். துறவு மேற்கொண்டவர்கள் ஊன் உண்ண மாட்டார்கள் என்று கூட அறியாதவன். இராமர்பால் அவன் கொண்ட தூய அன்பினாலே, பக்தியினாலே தான் கொண்டு வந்ததைச் சமர்ப்பிக்கின்றான். இராமரும் அவனுடைய பக்தியின் ஆழத்தை நன்கு உணர்ந்து அவன் தந்த உணவை உண்டதாகக் கருதிக் கொள்ளச் சொல்லி, பக்தன் மனதிற்கு மகிழ்வு தருகின்ற இறைவனாகிறார். தொடர்ந்து எந்த விதமான பாகுபாடும் இன்றித் தூய பக்தியினால் இராமருக்குத் தீங்கு செய்ய நினைக்கும் அனைவரும் தனக்கு எதிரியாகக் கருதுகின்ற உணர்வு பூர்வ பக்தனாகக் குகன் வர்ணிக்கப்படுகிறான்.

அதனாலே தான் பரதன் படைகளோடு வருகிறான் என்று கேள்விப்பட்டதும் தன்னைச் சகோதரனாக ஏற்றுக் கொண்ட இராமருக்குத் துரோகம் செய்து இராமரை இந்தக் காட்டிலிருந்தும் துரத்துவதற்கு வருவதாக ஒரு கற்பனை எண்ணத்தைத் தானே உருவாக்கிக் கொண்டு பரதன் வருகைக்கு எதிராக

**ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர்போவாரோ ?**
**வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ ?**
**"தோழமை" என்று அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ?**
**"ஏழைமை வேடன் இறந்திலன்" என்று எனை ஏசாரோ ?**

**"ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள**
**வேடு கொடுத்தது பார்" எனும் இப்புகழ் மேவீரோ ?**
**நாடு கொடுத்த என்நாயகனுக்கு இவர் நாம்ஆளும்**
**காடு கொடுக்கிலர் ஆகி எடுத்தது காணீரோ?**

என்று சினந்து கொதிக்கின்றான். ஆனால் அதே குகன் பரதனை நெருங்கிப் பார்த்து அவனுடைய தவ உருவத்தைக் கண்டு உண்மை உணர்ந்து

**"எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு?"**

**ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா !**

என்றும் மனம் மாறி, பரதனைத் தன்னுடைய மற்றொரு தலைவனாக ஏற்றுக் கொள்கின்ற உணர்வுப் பிழம்புடன் உணர்வு பூர்வமான பக்தன் ஆகிறான்.

மீண்டும் குகனைப் பற்றிய முழுமையான பாத்திரப் படைப்பைப் பின்பு பார்ப்போம்.

*(தொடரும்...)*

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்
### 12. திருக்குடந்தை
### (அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பன்னிரண்டாவது திவ்ய தேசம், திருக்குடந்தை என்ற கும்பகோணம். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பன்னிரண்டாவது திருத்தலமாகும். தஞ்சைத் தரணியில் தனிப்பெருமை வாய்ந்த பதியான கும்பகோணம் கோவில்களின் நகரமாகும். இந்த க்ஷேத்திரம் சோழ நாட்டில் காவிரி நதி - காவிரி, அரசலாறு என்று இரண்டாகப் பிரிந்து மீண்டும் ஒன்று சேரும் இடமான கும்பகோணத்தின் மத்தியில் அமைந்துள்ள அழகான க்ஷேத்திரமாகும்.

இத்தலம் திருப்பதி ஸ்ரீனிவாசனும், திருவரங்க ரங்கநாதனும் தாமே வந்து புகுந்த தலமாகும்.

ஒருமுறை, மும்மூர்த்திகளில் சாந்தம் நிறைந்தவர் யார் என்று தேடிக்கண்டு பிடிக்கும் வேலையை, அனைத்து ரிஷிகளும் சேர்ந்து ப்ருகு மகரிஷிக்குக் கொடுத்தனர். ப்ருகு மகரிஷி, முதலில் சத்யலோகம் சென்றார். அங்கே பிரம்மா, இவரைச் சட்டையே பண்ணாமல் சரஸ்வதியிடம் பேசிக் கொண்டு, இவரை வரவேற்கவில்லை. திசைக்கொன்றாக நான்கு முகம், அதில் எட்டுக் கண்கள் இருந்து என்ன பலன்? பூலோகத்தில் உனக்கென்று தனியாகக் கோவிலே இல்லாமல் போகட்டும் என்று சபித்து விட்டுக் கைலாயத்திற்குச் சென்றார்.

கைலாயத்தில், சிவனும் பார்வதியும் ஆனந்த நடனம் ஆடிக் கொண்டிருக்க, நந்தி முதற்கொண்டு பரிவாரங்கள் அனைத்தும் நடனத்தைப் பார்த்து ரசித்து மூழ்கிப் போய், ப்ருகு முனிவரைக் கண்டுகொள்ளவில்லை. இனி உனக்கு உன் சொந்த உருவத்தில் சிலையாக உன்னைக் கோவிலில் வைத்துக் கும்பிட மாட்டார்கள். அதற்குப் பதிலாய் லிங்கம் தான் என்று சொல்லிவிட்டு வைகுந்தம் சென்றார்.

வைகுந்தத்தில், மஹாவிஷ்ணுவின் காலை அமுக்கி விட்டுக் கொண்டிருக்கும் மஹாலெஷ்மியும், சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்ததில், வந்த ப்ருகு முனிவரைக் கவனிக்கவில்லை. கோபமுற்ற ப்ருகு மகரிஷி, மஹாவிஷ்ணுவின் மார்பில் எட்டி உதைத்தார். சட்டென்று அவர் பாதத்தைப் பிடித்த பெருமாள், ஐயோ! உங்கள் பாதம் நோகுமே என்று கவலைப்பட்டதும், ப்ருகு முனிவரின் கோபம் மறைந்தது. இவர்தான் சாந்தமூர்த்தி என்பதும் புரிந்தது.

ஆனால், அவர் சென்றதும், மஹாலெஷ்மிக்கு ஒரே கோபம். நான் எப்போதும் உறைந்திருக்கும் திருமார்பில் ஒருவர் எட்டி உதைக்க இடம் கொடுத்துவிட்டீரே! இவரைத் தண்டிக்காமல் சும்மா விட்டிருக்கலாமா! இது எனக்கு ஏற்பட்ட பெரிய அவமானம் என்று கூறி, வைகுந்தத்திலிருந்து கிளம்பிப் பூலோகத்திற்கு வந்து, ஹோல்காப்பூரில் மறைந்திருந்தார்.

திருமகளை இழந்த வைகுந்தத்தில், தாமும் இருக்க விரும்பாமல், எம்பெருமான் மஹாலெஷ்மியைத் தேடி, பூலோகத்திற்கு வந்து திருமலை என்னும் திருப்பதியில் ஒரு புற்றில் மறைந்து வசித்தார். எம்பெருமான், இராமாவதாரத்தில், வேதவதி என்னும் பெயர் பூண்டிருந்த பத்மாவதி தேவியைக் கலியுகத்தில் மணந்து கொள்வதாக வாக்குக் கொடுத்திருந்தார். அவ்வாறே, திருமலையில் எம்பெருமான் ஸ்ரீனிவாசன் பத்மாவதித் தாயாரை மணந்து கொண்டார்.

ஹோல்காப்பூரில் மறைந்திருந்த மஹாலெஷ்மி, நாரதர் வாயிலாகப் பத்மாவதியை மணந்த நிகழ்ச்சியை அறிந்து, மிக்க சீற்றத்துடன் திருமலைக்கு வந்தார். மஹாலெஷ்மியின் கோபத்திற்குப் பயந்த எம்பெருமான், திருமலையில் இருந்து ஓடிவந்து,

இத்திருக்குடந்தையில் ஒரு பாதாளக் குகையில் தம்மை மறைத்துக் கொண்டார். இன்றும் இக்கோவிலில் பாதாள சீனிவாசன் என்ற பெயரில் பூமிக்கடியில் ஒரு திருச்சன்னிதி உள்ளது.

இவ்விதம் திருவேங்கடநாதன் என்னும் ஸ்ரீனிவாசன் இத்தலம் வந்து சேர்ந்தார்.

எம்பெருமானைப் பின் தொடர்ந்து, இத்தலத்திற்கு வந்த திருமகள், பெருமாளை எங்கு தேடியும் காணமுடியாததால், எவ்விதமாயினும் காண வேண்டுமென்று ஏக்கம் கொண்டு, இனி எம்பெருமானைக் காண்பதற்கு ஒரே வழி, அவரை எண்ணித் தவம் செய்தலே என்று முடிவு செய்தார்.

ப்ருகு முனிவர், எம்பெருமானை உதைத்த பாவத்தைப் போக்கிக் கொள்ளவும் , மனம் நொந்த திருமகளைச் சாந்தி அடையச் செய்யவும், திருமகளே தனக்கு மகளாக வந்து பிறக்க வேண்டும், தான் அவருக்குப் பணிவிடைகள் செய்ய வேண்டும் என நினைத்து, ஹேம மகரிஷி என்ற பெயரில் இத்தலத்தில் கடுந்தவம் செய்தார்.

மஹாலெஷ்மி, இத்தலத்திலுள்ள பொற்றாமரையில், ஒரு சிறு குழந்தையாகத் தோன்றினாள். காத்திருந்த தருணம் கண்முன் வாய்த்ததென்று, ஹேம மகரிஷி அக்குழந்தையை வாரியெடுத்து, கோமளவல்லி என்னும் திருநாமம் சூட்டி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தார்.

இது இவ்வாறிருக்க, பிரம்மாவின் தவத்தால், திருப்பாற்கடலிலிருந்து சுயம்புவாகத் தோன்றியது ஒரு நாராயணர் சிலை. இந்த நாராயணர் சிலைக்கு நித்திய பூசை செய்யுமாறு சூரியனை நியமித்தார், பிரம்மா. பிறகு சூரிய வம்சத்தில் ஒருவரான இட்சுவாகு அரசர், தனது தலைநகரமான அயோத்திக்கு இச்சிலையைக் கொண்டு சென்று வழிபட்டார். ஸ்ரீராமரும் அச்சிலையை வழிபட்டு வந்தார். ஸ்ரீராமர் பட்டாபிஷேகத்தன்று வருகை தந்த இராவணனின் தம்பி விபீஷணருக்கு அச்சிறிய நாராயணர் சிலையைப் பரிசளித்தார். ப்ரணவாக்ருதி விமானம், வைதிக விமானம் என்ற இரண்டு விமானங்களால் ஒருங்கேயமைக்கப்பட்ட தேரில் அமர்ந்திருந்த எம்பெருமானை விபீஷணர் கொண்டு வருங்கால்,

காவிரி, கொள்ளிட நதிகளுக்கிடையில் அமைந்துள்ள திருவரங்கத்தில் அரங்கநாதனாக, அசைக்க இயலாதவனாக, அரவணையில் ப்ரணவாக்ருதி விமானத்தின் கீழ் பள்ளி கொண்டுவிட்டார் எம்பெருமான்.

செய்வதறியாது திகைத்து நின்ற விபீஷணரை நோக்கி, நீ ஆண்டுக்கொருமுறை இங்கு வந்து எம்மை வழிபட்டுச் செல்லலாம். ப்ரணவாக்ருதியின் இன்னொரு பிரிவான வைதிக விமானத்துடன் யாம் திருக்குடந்தை சென்று ஹேமமகரிஷிக்கு அருள் புரிந்து லெஷ்மிதேவியை மணக்க விருக்கிறோம் என்று கூறி மறைந்தார்.

அதுபோல், கையில் சார்ங்கம் என்னும் வில்லுடன் மகர சங்கராந்தியன்று வைதிக விமானத்துடன் குடந்தை வந்திறங்கிய எம்பெருமான் கோமளவல்லியை ஏற்றுக் கொண்டு மணம் செய்து ப்ருகு முனிவருக்கும் பேரருள் புரிந்தார்.

இவ்விதம், ஸ்ரீரங்கநாதனும் இத்தலம் வந்து சேர்ந்தார்.

தாயாரைத் திருமணம் செய்வதற்காகப் பெருமாள், தேரில் வந்து இறங்கியதால் சுவாமியின் கருவறையே மிகவும் பிரம்மாண்ட சக்கரங்கள் கொண்ட திருத்தேர் வடிவில் அமைந்துள்ளது.

இத்தலத்தில் அமைந்துள்ள சித்திரைத் தேர் அல்லது சித்திரத் தேர், திருமங்கையாழ்வார் இப்பெருமானுக்கு அர்ப்பணித்ததாகும். இத்தேரினையே மங்களாசாசனம் செய்வது போல் திருவெழு கூற்றிருக்கை என்னும் பிரபந்தத்தை அருளியுள்ளார் திருமங்கையாழ்வார்.

பஞ்சரங்கம் என்று சொல்லக்கூடிய ஐந்து அரங்கங்களில் இதுவும் ஒன்று.

ஆதிரெங்கம் – ஸ்ரீ ரெங்கப்பட்டினம் (மைசூர்)

அப்பால ரெங்கம் – திருப்பேர் நகர்.

மத்திய ரெங்கம் என்ற கஸ்தூரி ரெங்கம் – ஸ்ரீ ரெங்கம்

சதுர்த்த ரெங்கம் என்ற சாரங்கம் – கும்பகோணம்

பரிமள ரெங்கம் – இந்தளூர் (மாயவரம்)

இங்கிருக்கும்

மூலவர் – ஆராவமுதன்

தாயார் – கோமளவல்லி (படிதாண்டாப் பத்தினி)

உற்சவர் – சார்ங்கபாணி

தீர்த்தம் – ஹேமவல்லி புஷ்கரணி, காவிரி, அரசலாறு

தலவிருட்சம் – புன்னை மரம்

விமானம் – வைதிக விமானம்

கோலம் – கிழக்கு நோக்கிய உத்தனன் சாயித் திருக்கோலம்

இக்கோயிலில், அழகான, கம்பீரமான பதினொருநிலை இராஜகோபுரம் உள்ளது. அதைக் கடந்து உள்முற்றத்தில் காலடி எடுத்து வைக்கும் போது கண்முன் ஸ்ரீசார்ங்கா ஸ்ரீசார்ங்கா ஸ்ரீசார்ங்கா என்று மூன்று தடவைகள் எழுதப்பட்ட திருநாமத்தைக் காணலாம்.

பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஏழு ஆழ்வார்கள் மொத்தம் 51 பாசுரங்களால் இத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

திருமழிசையாழ்வார், இப்பெருமானை நோக்கி,

**நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞாலம் ஏனமாய்**
**இடந்த மெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம்**
**கடந்த கால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்**
**கிடந்தவாறு எழுந்திருந்து பேசு வாழி கேசனே.**

இலங்கைக்கு நடந்த வருத்தத்தால் கால்கள் நொந்து களைத்துப்போய்ப் படுத்துள்ளீரோ, வராஹரூபியாய் உலகைத் தாங்கிய களைப்போ, கிடந்தவாறே எழுந்திருந்து பேசு கேசவா என்று பாடியதும், அவருக்காக சுவாமி எழ முயன்றார். திருமாலின் அருளைக் கண்டு மகிழ்ந்த திருமழிசையாழ்வார், ஐயோ! வீணாக நாம் பெருமாளைச் சிரமப்படுத்திவிட்டோமே என நினைத்து, எழுந்திருக்க முயன்ற எம்பெருமானை நோக்கி, அப்படியே காட்சி கொடு கேசவா, என்றதும், சற்றே எழுகின்ற திருக்கோலத்தில் புஜத்தைச் சாய்த்து

எழுந்திருக்க முயல்வது போலக் காட்சி கொடுத்தாராம். அதனால் இத்தலத்தில், பெருமாள் உத்தனன் சாயி, அதாவது, சாய்ந்து எழ முயலும் திருக்கோலத்தில் உள்ளார்.

இத்தலத்தின் தாயார் கோமளவல்லி ஒருபோதும் வெளியில் உலாவராது, இறைவன் திருப்பணியிலேயே இடையறாது ஈடுபட்டிருப்பதால் படிதாண்டாப்பத்தினி என்ற பெயரும் தாயாருக்குண்டு.

பெருமாள் சங்கு, சக்கரத்துடன் மட்டும் காட்சி தருவார். ஆனால், இத்தலத்தில் உள்ள உற்சவர், சங்கு சக்கரத்துடன் சார்ங்கம் என்னும் வில்லையும் எப்போதும் கையில் வைத்திருப்பதால், இவருக்கு சார்ங்கபாணி என்ற திருநாமம் உண்டாயிற்று. 108 திவ்ய தேசங்களில், மற்ற தலங்களைப் போலன்றி, இத்தலத்தில் மூலவருக்குள்ள சகல மரியாதைகளும் சிறப்புக்களும் உற்சவருக்கும் உண்டு. இருவரும் ஒப்பிலா அழகில் திளைத்தவர்கள். உற்சவர் மூலவரின் பொறுப்பில் இருந்து உபயமாக, அதாவது அவருக்குப் பதிலாகச் செயல்படுபவராக இருக்கிறார். உபயமாகப் பயன்படுவதே இங்கு பிரதானமாகவும் ஆவதால், இதற்கு உபயப் பிரதான திவ்ய தேசம் என்ற பெயருண்டு.

இக்கோயிலுக்கு அருகில் சக்ரபாணி கோயில் உள்ளது. இவரும் சார்ங்கபாணியும் அண்ணன் தம்பிகளாகக் கருதப்பட்டுப் பல உற்சவங்கள் நடைபெறுகின்றன. இக்கோயிலுக்கு அருகிலுள்ள இராமசுவாமி கோயிலில் இராமாயணக் காட்சிகள் வண்ணத்தால் அருமையாக வரையப்பட்டுள்ளன.

பெருமாள் கோவில்களில் பெரும்பாலும் சொர்க்கவாசல் இருக்கும். ஆனால், இத்தலத்தில் சொர்க்கவாசல் கிடையாது. இத்தலத்து சுவாமி நேரே வைகுண்டத்திலிருந்து இங்கே வந்தார். எனவே, இவரை வணங்கினால் பரமபதம் கிடைத்துவிடும் என்பதால், சொர்க்கவாசல் கிடையாது. மேலும், இங்கு, உத்ராயண வாசல் வழியே தை முதல் ஆனி வரையும், தெட்சிணாயண வாசல் வழியே ஆடி முதல் மார்கழி வரையும், சுவாமியைத் தரிசிக்கச் செல்ல வேண்டும்.

என் அய்யா, காப்பியக் கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா. மீனவனார் திருக்குடந்தை குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான், அகத்திலும் இருப்பான், புறத்திலம் இருப்பான், அனைத்திலும் இருப்பான் ஸ்ரீமன் நாராயணன். பகை கொண்ட அரக்கர்கள் சிதறி ஓடும்படியாகப் படை தொடுத்த பெரும் வலிமை உடையவன் எம்பெருமான் என அறிந்து அவனடியை வணங்குவோர், துதிப்பதற்காக, இந்தத் திருக்குடந்தையில் உறைந்திருப்பவனை வணங்கச் சொல்லும் முதல் பாடல்,

**அகமிருப்பான் புறமிருப்பான் அனைத்திலுமே தானிருப்பான்**
**பகையரக்கர் இருளிரியப் படைதொடுத்த பெருந்திறலின்**
**தகையறிந்து வணங்கிடுவார் தன்னடியைத் துதிக்கவென**
**உகந்திந்தத் திருக்குடந்தை உறைவானை வணங்குதுமே.**

2. மதுரகவியாழ்வார், தன்னுடைய குருவான நம்மாழ்வாரைப் பெருமைப்படுத்தும் வகையில், நம்மாழ்வாரின் பாடல்களை ஊர் ஊராக எடுத்துச் சென்று பாடி, ஒரு பெரிய தொண்டு செய்தார், இருந்தாலும், ஆழ்வார்கள் காலத்தில் இயற்றப்பட்ட இந்த ப்ரபந்தங்கள், மதுரகவி ஆழ்வாரின் காலத்திற்குப் பிறகு, நாளடைவில் ஒரு சில இடங்களைத் தவிர மற்ற இடங்களில் மறையத் தொடங்கின. வீரநாராயணபுரம் என்று அந்நாளிலும், இப்போது காட்டு மன்னார்குடி என்று கூறப்படும் ஊரில் அவதரித்த நாதமுனிகள், ஒரு நாள் அந்த ஊரிலுள்ள வீரநாராயணப் பெருமாள் கோவிலில் தரிசனம் செய்து கொண்டு இருந்த போது, சில பக்தர்கள் பெருமாளின் பெருமையை, நம்மாழ்வார் திருக்குடந்தைப் பெருமாளுக்குப் பாடிய பதிகமான ஆராவமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே என்று தொடங்கி, ஓராயிரத்துள் இப்பத்தும் என்று சொல்லிப் பாடி, காமர் மானேய் நோக்கியர்க்கே என்று முடித்தனர். இந்தப் பாடல்களின் இனிமையைக் கேட்ட நாதமுனிகள் வியந்து, மீதிப் பாடல்களையும் பாடும் படி கேட்டார். ஆனால், அவர்களுக்கு அவை தெரியவில்லை.

அப்பாடல்களின் வரியை மீண்டும் மீண்டும் கேட்ட நாதமுனிகள், அதிலிருந்த குருகூர்ச் சடகோபன் என்பதிலிருந்து குருகூர் எனப்படும் ஆழ்வார் திருநகரி சென்று, மதுரகவியாழ்வாரின் சீடர்கள் மூலம் அவர் இயற்றிய கண்ணிநுண் சிறுதாம்பு என்ற பிரபந்தத்தை பல ஆயிரம்

முறை சொல்லி, மதுரகவியாழ்வார் மற்றும் நம்மாழ்வாரின் ஆசீர்வாதங்களால் அந்த திவ்யப்ரபந்தப் பாடல்களைப் பெற்றார். ஆயிரம் பாடல்கள் கிடைக்குமென வந்த இடத்தில், நாலாயிரம் பாடல்கள் கிடைத்தன. இவற்றை நாதமுனிகள் நாலாயிர திவ்யபிரபந்தம் என்று தொகுத்தார். ஆக நமக்கு திவ்ய பிரபந்தப் பாடல்கள் கிடைக்கக் காரணமாய் இருந்த ஆராவமுதன், ஆராவமுதாழ்வார் என்று போற்றப்படுகிறார்.

மேலும், தனக்கும் திருமழிசை ஆழ்வார்க்குமுள்ள பரஸ்பர அன்பைப் பரிமாற்றம் செய்து கொள்ளும் விதமாக, தனது பிரான் என்னும் பட்டத்தைத் திருமழிசைக்குக் கொடுத்து, திருமழிசைப் பிரானாக ஆக்கிவிட்டு, தான் ஆழ்வார் என்ற பட்டத்தைக் கொண்டு ஆராவமுதாழ்வாராகக் கோவிலில் ஆட்சி செய்கிறார்.

ஆராவமுதனை, சார்ங்கம் என்னும் வில்லைக் கையில் கொண்டு சயனத் திருக்கோலத்தில் இருப்பவனைக் காண நாதமுனிகள் வந்து பணிந்த தலம், அழகான இத்திருக்குடந்தை. தம்மைச் சேர்ந்த தலம் என்று ஆழ்வார்கள் ஒன்று கூடிய இத்தலத்தை இடைவிடாது நினைக்கச் சொல்லும் இரண்டாம் பாடல்.

**ஆரா அமுதன் அழகுதிருக் குடந்தைவாழ்**
**சாரங்கக் கையன் சயனத் திருக்கோலம்**
**பாருமென நாதமுனி பணிந்ததலம் தனைஎன்றும்**
**சேருமென ஆழ்வார்கள் சேர்ந்தபதி சேருமினே.**

3. ப்ருகு முனிவர், ஹேம முனிவராக வந்து தொழுவதற்கு, இசைந்து வரமருளிய பிரான், கூர்ம அவதாரத்தில் ஆமையாய், வராக அவதாரத்தில் ஏனம் என்னும் காட்டுப்பன்றியாய், கிருஷ்ண அவதாரத்தில், ஆலிலைமேல் கண்ணனாய், நாம் தொழுவதற்காக அரவணையில் கிடப்பவனை, கோமளவல்லித் தாயை மணந்தவனைப் பணியச் சொல்லும் மூன்றாம் பாடல்,

**ஏமமுனி வந்துதொழ இசைந்துவரம் தந்தபிரான்**
**ஆமையாய் ஏனமாய் ஆலிலைமேல் கண்ணனாய்**

**நாமுலகில் தொழவென்றே நாகமிசைக் கிடப்பானைச்**
**சேமமுறக் கோமளத்தாய் சேர்ந்தானைப் பணியுமினே.**

4. ஒரு முறை, கிருஷ்ணன் மண்ணைத் தின்று விட்டதாக, அவனுடைய தோழர்கள் யசோதையிடம் தெரிவித்தனர். வாயைத் திறந்து காட்டச் சொன்ன யசோதைக்கு, கண்ணன் தன் பவள வாயைத் திறந்து காட்டினான். அந்தப் பவளவாய்க்குள் அண்ட சராசரங்களும் தெரிந்தன. இரவு பகல் உண்ணாமல் உறங்காமல் மாமுனிவோர், அந்த மண்தின்ற மாயனை, வீரம் கொண்ட தோள்களை உடையவனை, கண்ணென்றும் கண்ணின் கருமணியென்றும் போற்றி, பண்ணைவயல் சூழ்ந்த திருக்குடந்தையைப் பணிகின்றனர். அவர்களைப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல்,

**உண்ணாமல் உறங்காமல் உலகிடையே மாமுனிவோர்**
**மண்ணென்று தின்றானை மறந்திகழு தோளானைக்**
**கண்ணென்று கொண்டார்தம் கண்ணின் கருமணியைப்**
**பண்ணைவயல் சூழ்குடந்தை பணிவாரைப் போற்றுதுமே.**

5. அழகு பொருந்திய குடந்தை நகரில் வீற்றிருந்து, தேவர்கள் தொழுது புகழத் திருநாமங்கள் ஆயிரம் உடையவனை, துன்பங்களைத் தீர்க்கின்ற பெருமானை வந்து தொழுகின்ற, உழவுப் பணி செய்து உலகில் பசியைத் தீர்க்கின்ற சீராளர் குடி உயர்வதற்காக, தனது சேவடிகளைக் காட்டும் பேரரங்கனாகிய சார்ங்கனின் திருவடிகளைப் போற்றச் சொல்லும் ஐந்தாம் பாடல்,

**ஏராரும் குடந்தைநகர் இருந்தமரர் தொழுதேத்தப்**
**பேரானை இடர்தீர்த்த பெருமானை வந்துதொழும்**
**சீராளர் குடிவிளங்கச் சேவடியைக் காப்பாக்கும்**
**பேரரங்கன் சாரங்கன் பேரடியை ஏத்துமினே.**

ஆரா அமுதாக, அதாவது, தெவிட்டாத அமுதமாகத் திகழ்கின்ற எம்பெருமானே, என்னுடைய உடலானது உன்மேல் அன்புகொண்டு, நீராக அலைந்து கரையும்படி என்னை உருக்குகின்ற நெடுமாலே, சிறந்த செந்நெல் கவரி வீசுகிற, செழிப்பான நீர்வளம் கொண்ட திருக்குடந்தையிலே, அழகிய திருமேனி திகழும்படி, கிடந்த

திருக்கோலத்தில் அருள் செய்கிறவனே, உன்னை நான் கண்டேனே என்று கூறும் நம்மாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

**ஆராஅமுதே, அடியேன் உடலம் நின்பால் அன்பாயே**
**நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே,**
**சீரார் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த் திருக்குடந்தை**
**ஏரார் கோலம் திகழக் கிடந்தாய், கண்டேன் எம்மானே.**

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### சொல்வன்மை

(சொல்வதில் வல்லமை)

**1. நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்**
**யாநலத்து உள்ளதூஉம் அன்று.**

நாநலம் என்னும் – நாவினால் உள்ளதாகிய நலம் என்னும்; நலன் உடைமை – சொல்வன்மையாகிய நலத்தினை உடையவராதல்; அந்நலம் – அந்த நலம்; யாநலத்து – எந்த வகையான நலத்தினுள்; உள்ளதூஉம் அன்று – உள்ளதும் இல்லை.

நாவினால் உள்ளதாகிய நலம் என்னும் சொல்வன்மையாகிய நலத்தினை உடையவராதல் எந்த வகையான நலத்தினுள்ளும் இல்லை. எல்லா நலத்திலும் நாநலம் சிறப்புடையது.

**2. ஆக்கமும் கேடும் அதனால் வருதலான்**
**காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.**

ஆக்கமும் – செல்வப் பெருக்கும்; கேடும் – அழிவும்; அதனால் வருதலான் – சொல்லும் சொல்லால் வருவதால்; காத்து ஓம்பல் – போற்றிக் காக்க வேண்டும்; சொல்லின் கண் சோர்வு – சொல்லில் ஏற்படும் தளர்வு.

செல்வப் பெருக்கும் அழிவும் சொல்லும் சொல்லால் வருவதால் சொல்லில் ஏற்படும் தளர்வு(குறை) வராமல் போற்றிக் காக்க வேண்டும்.

**3. கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாம் சொல்.**

கேட்டார்ப் பிணிக்கும் - கேட்பவர்களை ஆர்வம் உள்ளவராக்கும்; தகை - குணங்களை; அவாய் - விரும்பி; கேளாரும் - கேட்க விரும்பாதவர்களும்; வேட்ப - விரும்புமாறு; மொழிவதாம் சொல் - சொல்லுவதே சொல்லின் வலிமை ஆகும்.

கேட்பவர்களை ஆர்வம் உள்ளவராக்கும் குணங்களை விரும்பி, கேட்க விரும்பாதவர்களும் விரும்புமாறு சொல்லுவதே சொல்லின் வலிமை ஆகும்.

**4. திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனின்ஊங்கு இல்.**

திறன்அறிந்து - சொல்லின் தன்மையையும், கேட்போரின் தன்மையையும் அறிந்து; சொல்லுக சொல்லை - சொல்லைச் சொல்ல வேண்டும்; அறனும் பொருளும் - அறமும் பொருளும் என்ற பயன்கள்; அதனின் ஊங்குஇல் - அவ்வாறு சொல்லுவதற்கு மேற்பட்டது இல்லை.

சொல்லின் தன்மையையும் கேட்போரின் தன்மையையும் அறிந்து சொல்லைச் சொல்ல வேண்டும்; அவ்வாறு சொல்லுவதற்கு மேற்பட்ட அறமும் பொருளும் என்ற பயன்கள் இல்லை.

**5. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து.**

சொல்லுக சொல்லை - சொல்லைச் சொல்ல வேண்டும்; பிறிதோர் சொல் - வேறு ஒரு சொல்; அச்சொல்லை - தான் சொல்லும் அந்தச் சொல்லை; வெல்லும் சொல் - வெல்லுகின்ற சொல்; இன்மை அறிந்து - இல்லை என்பதை அறிந்து.

தான் சொல்லும் சொல்லை வெல்லுகின்ற வேறு ஒரு சொல் இல்லை என்பதை அறிந்து சொல்லைச் சொல்ல வேண்டும்.

**6. வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.**

வேட்பத்தாம் சொல்லி - பிறர் விரும்பும் படியாகத் தாம் சொல்லி; பிறர் சொற் பயன் கோடல் - அவர் சொல்லும் சொல்லின் பயனைக் கொள்ளுதல்; மாட்சியின் - மாட்சிமைப்பட்ட; மாசற்றார் கோள் - குற்றமற்ற அமைச்சரின் கொள்கையாகும்.

பிறர் விரும்பும்படியாகச் சொல்லி அவர் சொல்லும் சொல்லின் பயனைக் கொள்ளுதல் மாட்சிமைப்பட்ட குற்றமற்ற அமைச்சரின் கொள்கையாகும்.

**7. சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை**
**இகல்வெல்லல் யார்க்கும் அரிது.**

சொலல்வல்லன் - தான் எண்ணியதைச் சொல்லுவதில் வல்லவனாய்; சோர்விலன் - தளர்ச்சி இல்லாதவனாய்; அஞ்சான் - சொல்லுமிடம் கண்டு அஞ்சாதவனாய்; அவனை - இருக்கும் அமைச்சனை; இகல்வெல்லல் - மாறுபட்ட இடத்தில் வெல்லுதல்; யார்க்கும் அரிது - எவருக்கும் அரிதாகும்.

தான் எண்ணியதைச் சொல்ல வல்லவனாய், தளர்ச்சி இல்லாதவனாய், சொல்லுமிடம் கண்டு அஞ்சாதவனாய் இருக்கும் அமைச்சனை மாறுபட்ட இடத்தில் வெல்லுதல் எவருக்கும் அரிதாகும்.

**8. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்.**

விரைந்து - விரைவாக, தொழில் - செய்ய உள்ள செயல்களை; கேட்கும் ஞாலம் - உலகத்தவர் கேட்பர்; நிரந்து இனிது - முறைப்படுத்தி இனிதாக; சொல்லுதல் - சொல்லுவதில்; வல்லார்ப் பெறின் - வல்லவரைப் பெற்றால்.

செய்ய உள்ள செயல்களை முறைப்படுத்தி இனிதாகச் சொல்லுவதில் வல்லவரான அமைச்சரைப் பெற்றால் உலகத்தவர் (அவற்றை) விரைந்து கேட்பர்.

**9. பலசொல்லக் காமுறுவர் மன்றமாசு அற்ற**
**சிலசொல்லல் தேற்றா தவர்.**

பல சொல்ல - பலவான சொற்களைச் சொல்ல; காமுறுவர் - விரும்புவார்கள்; மன்ற - உறுதியான; மாசு அற்ற - குற்றமற்ற; சில சொல்லல் - சில சொற்களைச் சொல்லுதலை; தேற்றாதவர் - தெளிந்து சொல்லத் தெரியாதவர்கள்.

உறுதியான குற்றமற்ற சில சொற்களைச் சொல்லுதலைத் தெளிந்து சொல்லத் தெரியாதவர்கள் பலவான சொற்களைச் சொல்ல விரும்புவார்கள்.

**10. இணர்ஊழ்த்தும் நாறா மலரனையர் கற்றது**
**உணர விரித்துரையா தார்.**

இணர் ஊழ்த்தும் - கொத்தாக மலர்ந்திருந்தாலும்; நாறா - மணம் தராத; மலரனையர் - மலர் போன்றவர்கள்; கற்றது - கற்றறிந்தவற்றை; உணர - பிறர் உணரும் வண்ணம்; விரித்து உரையாதார் - விரிவாக எடுத்துச் சொல்ல இயலாதவர்கள்.

கற்றறிந்தவற்றைப் பிறர் உணரும் வண்ணம் விரிவாக எடுத்துச் சொல்ல இயலாதவர்கள் கொத்தாக மலர்ந்திருந்தாலும் மணம் தராத மலர் போன்றவர்கள் ஆவர்.

*(தொடரும்...)*

## இளங்குமரற் கில்லை இறப்பு

**தமிழாகரர் தெ. முருகசாமி,**
**மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி**
**புதுச்சேரி – 9.**

1. அய்யா இளங்குமரர் ஆண்டுதொண் ணூற்றுநான்கில்
மெய்யாய் அடைந்த அகவையினால் – பொய்யுலக
வாழ்வையே நீத்துத்தான் வான்புகுந் திட்டாலும்
வாழ்வாங்கு வாழ்ந்தார் அவர்.

2. எத்தனைபேர் அன்னார் அருஞ்சீடர்! ஆன்றதமிழ்
வித்தகத்தை வேண்டினோர் எத்தனைபேர்! – அத்தனை
பேர்க்குமவர் ஆழ்கடல் போலமைதி ஆசானாய்ப்
பேர்பெற்றார் பேருலகில் பேறு!

3. கண்ணாடி தானணியாத் தாளாண்மை யாலேதான்
கண்ணாடி ஆய்ந்துரைத்தார் அத்துணையும்! – விண்ணாடிச்
சென்றாலும் வண்டமிழ்க் கான வகுப்பினையே
நன்றாய் நடத்துவார் அங்கு!

4. தவச்சாலை என்றதுமே அய்யா நினைவு
சிவச்சின்ன மாகவே சிந்தை – சிவக்கவே
அல்லூரின் வள்ளுவராய் வாழ்ந்த பெருந்தகைபேர்
சொல்லூறிச் சொல்லச் சுகம்!

5. இளங்குமரன் என்றிட்ட ஈர்ப்பானை பேர்தான்
வளங்காட்டும் வற்றாப் பொருளால் – உளங்கனிய
ஓயாமல் ஓத உயர்பெற்றோர் வைத்தாரோ?
வாயார ஈரிளமைப் பேர்!

6. இலக்கண விற்பன்னர் என்பதற் கேற்ப
நலக்குறும் நற்பெயர் பெற்றார் – துலக்கமுறும்
ஆ! அசை வில்லா இளங்குமரர் பேர்தானும்
மீ மிசை யான பதம்!

7. ஒருபொருட் பன்மொழி என்றதன் மேலும்
இருபெய ரொட்டாயும் ஏற்கத் - தரும் பண்பில்
கொண்ட இளங்குமரர் கோலமிகு வாழ்வைத்தான்
விண்டுரைக்கச் சேரும் விருது!

8. ஒல்காப் புகழ்கொண்ட தொல்காப் பியந்தொட்டுப்
பல்கால் பயின்றிட்ட பைந்தமிழை - நல்காத
நாளில்லை என்றே நவிலும் படியாக
நாற்றாங்கா லானார் தமிழ்க்கு!

9. மன்றல் தமிழ்வளர்க்கும் மன்னுபுகழ் ஆதீனக்
குன்றக் குடியுடன் கோவிலூரும் - ஒன்றிய
பேரூரும் மற்றும் பழனித் திருமடத்தின்
பேறெல்லாம் பெற்றார் பெரிது.

10. கற்றோர்க்குத் தாம்வரம் பாகிய நற்றலைமை
உற்றதால் அன்னார் உலகறிய - பெற்ற
முதுமுனைவர் பேற்றால் தமிழ்ப்புலவர் கூட்டின்
பொதுமனிதர் ஆனார் பொலிந்து!

11. மதுரைத் தமிழ்ச்சங்க மாத்தமிழ்ச் சொத்து!
மதுரச் சொல் லாய்விற்கு வித்து! - புதுப்புது
வெல்லம்போல் தித்திப்பாய் வேண்டும் விளக்கமெலாம்
வெள்ளம்போல் தந்தமிழ் ஊற்று!

12. சங்கத் தமிழ்ப்புலவோர் சாயலில் வாழ்ந்தமகன்
சிங்கம் சிலிர்த்தெழல்போல் சிங்காரச் - சங்க நூல்
நாதம் முழக்கியே நல்லெதிர்ப் பாளருடன்
வாதம் புரிந்தார் பல!

13. ஆயிரங் காலத்தின் ஆன்றபயி ரென்றிடும்
ஆயிரங்க ளான திருமணத்தைப் - பாயிரமாய்
வள்ளுவம் சொல்லியே வாய்மணக்கத் தான்நடத்தி
உள்ளம் உவந்தார் உயர்ந்து!

14. நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
சொல்லிய அப்புறநா னூற்றினது - துல்லிய
மன்னன் எனும்சொற்கு நாடாள்வோன் என்றவர்க்குச்
சொன்னார் அப் துல்கலாம்பா ராட்டு!

15. தமிழக நல்லரசின் தக்கபா ராட்டை
அமிழ்தாகப் பெற்ற அறிஞர்! - இமிழ்கடல்சூழ்
ஞாலம் புகழ நயந்தமிழ்ச் சாதனையால்
சீலம் சிறந்தார் பிறந்து!

16. தள்ளாத போதும் தமிழின் களஞ்சியமாய்
விள்ளாத தில்லை இருந்தமிழை - உள்ளா
உளங்கொண்ட உத்தரமாய் வாழ்ந்திட்ட நம்மின்
இளங்குமரற் கில்லை இறப்பு!

**பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 10**

**தமிழாகரர் தெ.முருகசாமி**

**(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி**

காப்பியக் கவிஞர் மீனவனார் பாடிய பரந்தாமன் பாமாலையில் 52ஆவது திவ்ய தேசமாகத் திகழ்வது திருக்காரகம் ஆகும். காசினி போற்றும் காஞ்சியம் பதியின் வைணவப் பிரவாகம் அளப்பரியது. நகரேஷ் காஞ்சி எனப்படுதற்கேற்பக் கார்மேக வண்ணனாம் பரந்தாமனின் விண்ணகரங்கள் (கோயில்கள்) பல கொண்டவற்றுள் பெரிய காஞ்சிபுர ஊரக திவ்ய தேசத்தின் உள் சன்னிதியாக உள்ளது திருக்காரகமாகும்.

அஃகிய அஞ்ஞானம் (ஆன்மாவுடனாய அறியாமை) நீங்க நம்மையெல்லாம் வெஃகாவோடு (விருப்பத்தோடு) திருவெஃகா திருத்தலத்தைச் சேவிக்க வைத்த மீனவர், தாயார் பத்மா மணி நாச்சியார் உடனாய கருணாகரப் பெருமாளாம் பரந்தாமன் சன்னிதியை வணங்குதுமே என வழிகாட்டியபடிச் சேவிக்கின்றோம்.

நீரின்றி அமையாது என வள்ளுவர் சொன்னபடி உலகிற்கு மழையை வழங்கும் அருள் நிறைந்த கார்மேகமான காரகம், ஆகாயம் விட்டுத் தரையில் அருள் மழை பொழிவதாக மீனவர் காட்டுகிறார். விண்ணோர் இடர் களைந்தான், மண்ணகத்தார் உய்தி பெற மனங் கொண்டான் என்றார், ஆம் மழையின்றி மாநிலத்தார்க்கில்லை என்பது போல உலக மனித குலத்தைச் செழிக்கச் செய்ய, கார்மேகம் கூடுதல் வேண்டும் எனக் கும்பிடச் செய்கிறார் மீனவர்.

அதனால்தான் தெற்கு நோக்கிய நின்ற திருக்கோலத்துடன்

திருமங்கை ஆழ்வார் மங்களா சாசனம் கேட்ட வண்ணம் சேவை சாதிக்கின்றார் கருணாகரப் பெருமாள். அப்பரடிகளின் திருத்தாண்டகத்தைப் போல.

**ஊரகத்தாய் ஒண்துறை நீர் வெஃகா வுள்ளாய்!**
**உள்ளுவார் உள்ளத்தாய் உலகம் ஏத்தும்**
**காரகத்தாய் கார்வானத் துள்ளாய்! கள்வா!**

எனப் பாடுகிறார் கலியன் என்னும் திருமங்கையாழ்வார்.

இப்பாடலில் காரகத்தாய் என்றதும் கார்வானத்துள்ளார் என அடி எடுத்துச் சுட்டியதால் திருக்காரகத் திவ்ய தேசத்தின் அடுத்த திவ்ய தேசமாகக் காப்பியக் கவிஞர் திருக்கார் வானம் என்ற தலத்தைச் சேவிக்கச் செய்கிறார். இதுவும் காஞ்சிபுர ஊரகத்து உலகளந்த பெருமாள் கோயில் தென் பிரகாரத்தில் காரகத்தை ஒட்டி உள்ளதாகும்.

கார்வானம் என்ற பெயரும் காரகம் என்பதோடே தொடர்புடையதாகும். கமல வல்லியாம் தாமரைத் தாயாருடன் கள்வர் எனும் திருப்பெயருடன் மேற்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் பரந்தாமன் திருமங்கையாரின் மங்களா சாசனம் பெற்றவராவார்.

ஈண்டு 47ஆம் திவ்ய தேசமாம் நீரகமும் 50ஆம் ஊரகமும் 52ஆம் காரகமும் 53ஆம் கார் வானத்துடன் சங்கிலித் தொடர்பான பிணைப்புடையதாகச் சான்றோர் வரையறுக்கின்றனர்.

நீரகத் திவ்ய தேசத்தில் மூலவர் இல்லை. அதாவது உருவமில்லாத நீர் வண்ணன் என்ற காரணத்தால் மூலவர் இல்லை. மேட்டு நிலத்திலிருந்து பள்ளத்தை நோக்கித் தண்ணீர் பாய்வது போல மேற்கு நோக்கிய தலத்தின் சன்னிதி, கிழக்கு நோக்கி அருள்மழை பொழிவதால் நீரகப் பெருமான் எங்கும் உலா வருகிற உற்சவராக உள்ளார்.

அவ்வாறே அருள் நிறைந்த கருணாகரப் பெயருடன் கார்மேகமாக விளங்கும் காரகப் பெருமான், உலக மக்களின் தர்மாதி தர்ம வாழ்க்கைக்குத் தகுந்த படி மழை பெய்யும் என்பதை உணர்த்தத் தெற்கு நோக்கிச் சேவை சாதிக்கிறார்.

இவ்வாறாகவே மேகங்கள் தவழும் மேற்கு நோக்கிய நிலையில் ஆகாயமும் விளங்கும் கார்வான எம்பெருமான், மழை பெய்யும் தன்மையைப் பொதுவாக யாவராலும் அறிய முடியாத கள்ளத் தனம் (மறை பொருள்) என்பதால் அதனை விளக்கும் விதமாகக் கள்வர் என்ற பெயருடன் சேவை சாதிக்கின்றார் என்பது தத்துவப் பொருளாகும்.

மேற்படியாய்க் கூறியவற்றையெல்லாம் ஒன்றாய்க் கூட்டி மொழியுங்கால் ஒன்றை வரிசைப்படுத்தி உணரலாம், பரந்தாமன் பாமாலையில் திவ்ய தேசமாய்க் கவிஞர் மீனவரால் கூறப்பட்ட ஊரகம்(50) நீரகம்(47) காரகம்(52) கார்வானம்(53) எல்லாவற்றிலும் ஆதி மூலமாய் ஒருவரே வியாபித்துளார் என்பது நீரின் இன்றியமையாமையைக் குறிப்பாய்ச் சுட்டியதன் மூலம் உணரப்படுகிறது. இவற்றைக் கீழ்க்கண்டவாறாக விவரிக்கலாம்.

உலகம் - ஓர் ஊர், அவ்வூர் வாழ வேண்டுவது நீர், நீரென்றால் எல்லோர்க்கும் பயன்படும் மழைநீர் (கார்நீர்) அம்மழை நீர் வானிடமாய் வருவதால் கார் வானநீர். தரையில் உள்ள கடல், ஆறு, குளம் போன்ற இடத்து நீர், அந்தந்தப் பகுதியினர்க்கே பயன்படும், ஆனால் மழை நீரோ எல்லோர்க்கும் தூயதாய் வருவதால் பரந்தாமனும் அம்மழைநீர் போல் தூயன் என்பது கருத்து.

மேலும் இந்நான்கு திவ்ய தேசப் பெயர்களின் ஒற்றுமை பொருட்டுத் தத்துவ விசாரணையாகக் கூறுங்கால் மனித குலம் அடையக் கூடிய தர்மார்த்த காமமோட்சம் என்னும் நாற்பொருள் உண்மைகளையும் சுட்டிக்காட்டுமாறுள்ளன. (1) ஊரகம் - அறத்தின் விளக்கம் (2)நீரகம் - பொருளாதார (அர்த்தம் - பொருள்) விளக்கம், (3)காரகம் - இன்பத்தின் விளக்கம் (4)கார்வானம் - வீட்டின்பமாம் மோட்ச விளக்கம்.

இவ்வாறாகக் காப்பியக் கவிஞர் கார்வானச் சன்னிதியில் தத்துவ மழையால் நம்மை நனையச் செய்த தோடு, கார்வானப் பதியுறையும் கள்வன் ஒரு கருடப்புள், ஊர்வானாய், பார்வானம் அளந்த மாலாய்க் காட்சி தருவதைக் காட்டியவாறே திருக்கள்வனூர் என்னும் திருத்தலத்திற்கு நம்மை இட்டுச் செல்கிறார்.

அம் சிலை வல்லி உடனாய ஆதிவராகனாக உள்ள பரந்தாமன் - பெரிய காஞ்சிபுரத்தில் காமாட்சி அம்மன் திருக்கோயிலுக்குள் சன்னிதி கொண்டுள்ளது பற்றித் தத்துவம் கூறிச் சேவிக்க வைக்கிறார் மீனவர்.

பரந்தாமனின் கள்ளத்தனமே ஓர் அழகானது என்ற அறிவார்ந்த பொருண்மையில், அவன் ஆதிவராகனாக இருந்தாலும், யாரும் அறியாமல் அவரவர் உள்ளத்தில் எழுந்து நின்று ஒவ்வொருவர் உள்ளத்து எண்ணங்களிலும் ஊடுருவிக்குடைந்து அகழ்ந்து ஆராய்ந்து வெளிப்படா யோகமாயை ஞான உருவில் காணப்படுபவனாக உள்ளதால் அவனின் தத்துவப் பெயராக இத்திவ்ய தேசம் திருக்கள்வனூர் என்ற பெயர் பெற்றது என மீனவர் விளக்கும் போது நாம் நம்மையே மறந்து பரந்தாமன் பரவசத்தில் மிதந்தோம்.

ஜாடிக் கேற்ற மூடி என்பது போல அவனின் கள்ளத்தன அழகிற் கேற்ப நாச்சியாரும் அஞ்சிலை வல்லியாகப் பெயர் பெற்றுள்ளார், சிற்பி செதுக்காத பொற்சிலை அழகு கொழிக்கும் தேவதை வடிவே அம் சிலை வல்லி அழகாம் எனலாம். அவனும் அவளும் அழகு கொழிக்கும் அற்புதமுடையவர்கள் என்பதைக் கவிஞர்,

**ஆதி வராகனாய் அஞ்சிலை வல்லியுடன்**
**பாத மலர்காட்டிப் பாலாழி கிடப்பானை**
**சீதரன் என்பானைச் சேவித்துப் பணியுமினே**

என்றார். இப்படியாகக் காஞ்சிபுரத்தின் கோயில்களுள் திருமாலுக்கான சன்னிதிகள் பெரிய கோயிலுக்குள் கோயிலாக இருந்தன என்பது மட்டுமின்றிச் சைவக் கோயிலுக்குள்ளும் திவ்ய தேசம் இருந்தன என்பதால் சைவ வைணவப் பேதமிலாமல் இருந்த ஓர் சூழலை உணரும் போது தொண்டை நாடு சான்றோர் உடைத்தாகக் கூறுதற்கு இத்தகு சமயப் பொறையும் ஒரு காரணமாம் எனலாம்.

மேலே திருக்கள்வனூரின் சீதரனைக் காட்டிய மீனவர் - பெரிய காஞ்சிபுரத்தில் தனித்ததான திருப்பவள வண்ணம் என்னும் பச்சை வண்ணமாம் திவ்ய தேசப் பவளவல்லி உடனாய பவள வண்ணனைச் சேவிக்கச் செய்கிறார்.

மேற்கு நோக்கிய நின்ற கோல மூலவர், ஓர் அதிசயத் தோற்றத்துடன் சேவை சாதிப்பதைக் காப்பியக் கவிஞர் காட்டும் போது அரியும் சிவனும்

ஒன்று, இதை அறியாதவர் மண்ணு எனச் சொல்லத்தகும் நாட்டுப்புற வழக்கை நிலைப்பிக்கும் தன்மையில் உள்ளதாக உணர்கிறோம்.

**இடப்பாலில் மடப்பாவை ஈசனுக்கு மாலுக்கோ**

**தடமார்பில் பவளவல்லி** - யாகக் காட்சி தரும் சிவபரத்துவத்தையும் வைணவ வைபவத்தையும் ஒரு சேரப் பாடியுள்ளார் மீனவர்.

இக்காட்சியைத் திருமங்கை மன்னர் தாம்பாடிய திருநெடுந்தாண்டகத்தில்,

**கொங்கத்தார் வளங்கொன்றை யலங்கல் மார்வன்**
**குலவரையன் மடப்பாவை யிடப்பால் கொண்டான்**
**பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின் மேலாய்!**
**பனிவரையின் உச்சியாய்! பவள வண்ணா!**

எனப் பாடித் துதிக்கின்றார். இறைவனை நிறங்கள் ஓர் ஐந்துடையாய் என மணிவாசகர் கூறுதற்கேற்ப அதன் சாயலில் ஆழ்வாரும் பரந்தாமனை ஒரோ வழி நிறவேறுபாட்டால் உணர்ந்து வழிபட்டதாகத் தெரிகிறது.

பொதுவாகக் காலச் சூழற்சிக் கேற்ப மக்களின் மனங்கள் மாறும், அதுபோலக் கடவுள் தத்துவ உணர்வுகளும் மாறும் இயல்பில் யுகந்தோறும் மாறிமாறி அமைவதை நிறவேற்றுமையால் முன்னோர் உணர்ந்து காட்டியுள்ளனர்.

முதல் யுகத்தில் பால் வண்ண வெண்மையான கடவுள் நிறம் அடுத்த யுகத்தில் பச்சையாகவும் அதற்கு அடுத்ததான யுகத்தில் நீலமாகவும் மாறுமாம், இறுதியான இக்கலியுகத்தில் கரிய நிறமாய் நிற்கும் பரம்பொருளான பரந்தாமன், சிவனின் பவள வண்ணச் செந்நிறங் கொண்டுள்ளவனாய்த் தானும் ஆதி சிவனும் ஒன்றென்ற சமத்துவப் பக்தியை நிலைநாட்ட விரும்பிப் பரந்தாமனாம் பெருமாள் தன்னைத் தானே பச்சை நிறமான பார்வதி அம்சமாய்க் காட்சி தரும் ஒருமித்த இணைப்பை உலகிற்குக் காட்டவே பவள வண்ண - பச்சை வண்ண திவ்ய தேசப் பரந்தாமனாகச் சேவை சாதிக்கின்றான் எனத் தெரிகிறது.

இதற்கேற்பக் காஞ்சிபுர இரயில் நிலத்தின் அருகில் அடுத்தடுத்த

கோயில்களாக உள்ளன. இதனால் இவ்விரண்டு திவ்ய தேசங்களும் ஒன்றாகவே இணைத்துப் பேசப்படுவதாகவே மக்களது வழிபாடும் அமைந்துள்ளதாம் - என விளக்கிய மீனவரது மேதா விலாச அறிமுகத்தைக் கேட்டு மகிழ்ந்த நாம், திருப்பரமேச்சுர விண்ணகரம் என்னும் பெரிய காஞ்சிபுரம் சென்று வைகுந்த வல்லி உடனாய பரமபத நாதனாம் பரந்தாமனைச் சேவிக்கின்றோம்.

இப்பரமேச்சுர விண்ணகரத்திற்கு வைகுண்டப் பெருமாள் கோயில் என்ற வேறொரு பெயரும் உண்டு. மேற்கு நோக்கும் மூலவர், ஆன்மாக்களை மேலான வைகுண்ட உலகிற்குப் பாத்திரமாக்கும் மேலானவர் என்பதைக் குறிப்பாய் உணர்த்தும் விதமாக வைகுந்த வல்லியுடன் சேவை சாதிக்கின்றார், (அமர்ந்த கோல அற்புதக் காட்சியில்).

ஈச்சுரம் என்றால் சைவத்தில் கோயில் என்பது பொதுவான பொருள், வைத்தீஸ்வரம், பாடலீச் சுரம், தர்ப்பாணீச்சுரம் என்பன சிவன் கோயில்கள் ஆகும்.

ஆனால் வைணவத் தத்துவப் படித் திருமாலை ஈசுவரன் எனச் சிவனைக் குறிப்பது போலவே குறிப்பர். சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்றும் வைணவத்தில் தத்துவத்திரயம் என்பர், இந்த வகையில் பரம் பொருளான பரந்தாமன் வீற்றிருக்கும் விண்ணகரம் சிறப்பாகப் பரமேச்சுரம் எனப்பட்ட திவ்ய தேசமாகக் கொண்டாடப்பட்டது.

இத்திவ்ய தேசத்தில் அழகிய பல்லவ சிற்பங்கள் வரலாற்றுக் குறிப்புடன் செதுக்கப் பட்டுள்ளன. மேலும் தரை தளத்திற்கு மேல் உள்ள முதல் தளத்தில் வைகுண்ட வாசன் சயன கோலத்திலும் அதற்கு மேலுள்ள தளத்தில் நின்ற கோலத்திலும் சேவை சாதிக்கின்றான்.

திருமங்கை மன்னரின் மங்களா சாசனத்தின் பத்துப் பாடலிலும் பல்லவர் கோன் பணிந்த திவ்ய தேசமாகவே காணப்படுவதால் மீனவரும் பாவத்தை அகற்று திருப்பரமேச விண்ணகரம் எனப்பாவம் போக்கும் தலமாகப் பாடியுள்ளார்.

இனிக் காஞ்சிபுர எல்லை கடந்த ஊர்ப் பகுதியில் சென்னை சார் திவ்ய தேசம் பற்றி மீனவர் கூறுவதை அடுத்துக் காண்போமாக!

***(தொடரும்...)***

# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

**தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்**

## 51

தீவிர வைராக்கியம் வேண்டும்; இருந்தால் தான் பயன் கிடைக்கும். ஓர் ஊரில் நீண்ட காலமாகவே மழைபெய்யவில்லை; கால்வாய் வெட்டி, ஆற்றோடு இணைத்து வயலுக்குத் தண்ணீர் கொண்டுவர வேண்டும் என்று நினைத்த குடியானவன் ஒருவன் கால்வாய் வெட்ட ஆரம்பித்தான்; நீண்ட நேரம் ஆகிவிட்டது; மனைவியும் மகளும் வந்து, "குளிக்கும் நேரம் வந்துவிட்டது, குளிக்க வாருங்கள்" என்று அழைத்தார்கள்; கால்வாயை வெட்டி ஆற்றோடு இணைத்துத் தண்ணீர் கொண்டு வரும்வரை என் வேலையை நிறுத்த மாட்டேன், என்றான்; அப்படியே செய்து நீர் கொண்டு வந்த பிறகே வந்தான். பக்தி மேற்கொள்வதிலும் இப்படியான வைராக்கியம் வேண்டும்.

## 52

ஊசியில் நூலைக் கோக்க வேண்டுமானால், நூல் முனையைக் கூர்செய்து, நீட்டிக் கொண்டிருக்கும் சிறுசிறு பஞ்சுத்துகள்களை எடுத்து எறிந்து விடவேண்டும்; அதுபோலவே, கடவுளிடம் உனது மனத்தையும் இருதயத்தையும் ஒருமித்துச் செலுத்த வேண்டுமானால், அடக்கத்தோடும் பணிவோடும், வீண்கர்வங்களை நீக்கி, ஆசைகள் என்னும் துரும்புகளைக் களைந்து விடவேண்டும்.

## 53

புதிதாகப் பிறந்த கன்றுக்குட்டி, நிற்கக் கற்றுக் கொள்வதற்கு முன்னால், தட்டித் தள்ளாடித் தடுமாறிப் பலதடவை கீழே விழுகின்றது; அதுபோலவே சாதன மார்க்கத்தில், இறுதியாக வெற்றி பெறுவதற்கு முன்னால் பலமுறை தடுமாறிவிழவும், தவறுகள் நிகழவும் நேரிடவே செய்யும்.

## 54

ஒரு குழந்தை எவ்வளவு நேரம் வரைக்கும் அழுகிறது? தாய் அதற்குப் பாலூட்ட ஆரம்பிக்கும் வரைக்கும் தான் அழுகிறது; பாலுண்ணத் தொடங்கியதும் குழந்தையின் அழுகை நின்று விடுகிறது; சில குழந்தைகள் உண்ணுதற்கு இடையில் சிரிக்கவும் விளையாடவும் செய்வது உண்டு; இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகின்றவர்களின் பாங்கும் இத்தகையது தான்.

## 55

காலில் முள் தைத்துவிடுகிறது; அந்த முள்ளை வேறு ஒரு முள்ளைக் கொண்டு களைந்து எடுத்து விடுகிறோம்; பிறகு, இரண்டு முட்களையும் தூர எறிந்து விடுகிறோம்; அது போலவே, அக்ஞானம் என்னும் முள்ளை ஞானம் என்னும் முள்ளால் களைந்து எடுக்கிறோம்; பிறகு இரண்டையும் தூர எறிந்துவிட்டுத் தாண்டிப் போகிறோம்.

## 56

வருடத்தில் இத்தனை மரக்கால் மழை பெய்யும் என்று பஞ்சாங்கத்தில் குறித்து வைக்கப்பட்டிருந்தது. அதற்காக, பஞ்சாங்கத்தை எடுத்துக் கசக்கிப் பார்த்தால் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட அகப்படாது.

## 57

குளத்தில் மீன்கள் தள்ளித்தள்ளி எவ்வளவு தூரத்தில் இருந்தாலும், தண்ணீரில் ஓர் இரையைப் போட்டவுடன், நாலா பக்கங்களிலிருந்தும் மீன்கள் ஓடிவருகின்றன. அதுபோல, பக்தியும் சிரத்தையும் நிரம்பிய இதயத்தை உடைய பக்தனை நோக்கி இறைவன் வெகுவேகமாக வருகிறான்.

## 58

நீ, ஈஸ்வரனைத் தேடுகிறாயா? அப்படியானால், அவனை மனிதனிடம் தேடு; ஈஸ்வரனுடைய தெய்வீகம், மற்ற பொருள்களிடத்துக் காட்டிலும், மனிதனிடமே விசேடமாகத் தங்கியுள்ளது.

## 59

ஒரு ரயில்வே என்ஜின், தான் நகர்ந்து போய்ச் சேரவேண்டிய இடத்தை அடைவது மட்டுமன்றி, தன் பின்னால், நீளமாய் இணைக்கப்பட்டிருக்கும் சுமையேற்றியிருக்கும் பல வண்டிகளையும் இழுத்துச் செல்கிறது; அப்படித்தான் அவதார மகான்கள், பாவமூட்டைகளைச் சுமக்கும் ஆயிரக் கணக்கான மனிதர்களை இறைவனின் சந்நிதானத்தின் முன்னால் கொண்டு சேர்க்கிறார்கள்.

## 60

தெருப் பாடகன் ஒருவன் ஒரு கையால் சுருதி மீட்டிக் கொண்டும் மற்றொரு கையால் ஒருவகை மேளத்தைத் தட்டிக் கொண்டும், அதே சமயத்தில் பாட்டுப் பாடிக்கொண்டும் இருக்கிறான்; அதைப் போல

உலக வாழ்க்கைக்கு உட்பட்ட மனிதன் தனக்கு ஏற்பட்ட காரியங்களைக் கைகளால் செய்து கொண்டிருக்கையிலும், இறைவன் நாமத்தை முழுமனத்தோடு சொல்லி, இறைவனது குண அனுபவங்களை நினைத்துப் பார்க்க மறந்துவிடக் கூடாது.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது

ஆலவாய்ச் சண்பக சுந்தரருக்குச் சண்பக மாலை சூட்டி மகிழ்ந்த சண்பகமாறன் சிவபதம் பெற்ற பின்பு பிரதாப சூரியன் தொடங்கி பூப சூடாமணி முடியப் பதினான்கு பாண்டிய வேந்தர்கள் பாண்டி நன்னாட்டை ஆண்டு சென்றனர். பதினைந்தாவது பாண்டியனாகக் குலேசன் என்பான் பாண்டிய நாட்டை அரசு புரிந்து வந்தான்.

குலேச பாண்டியன் அரசியலிலே சிறந்து விளங்கினான். இலக்கண இலக்கியங்களிலே மிகுந்த தேர்ச்சி பெற்றவன். பெரு நூல்களையெல்லாம் நன்கு பயின்றவன். அதனாலே, முத்தமிழ்ப் புலவர் இருந்த சங்கப் பலகை அம் மன்னனுக்கும் இடம் அளித்தது.

குலேச வழுதி கல்வி கேள்விகளில் மிகச்சிறந்தவன் எனக் கேள்விப்பட்டுக் கபிலனது அன்பு நண்பனாகிய இடைக்காட்டுப் புலவன் என்பான், தமிழிலே பிரபந்தம் ஒன்று இயற்றிக் கொண்டு பாண்டியனைக் காண்போம் என்று கருதினான். தான் எண்ணியபடியே நல்ல பிரபந்த நூல் ஒன்று செய்து கொண்டு சென்று பாண்டிய மன்னனுக்குப் படித்துக் காண்பித்தான். பனுவல் மிக நேர்த்தியாக அமைந்திருந்தது. சொற்சுவையும், பொருளழகும், கருத்தாழமும் காட்டி விளங்கியது அந்த நன்னூல். ஆனால் அவற்றையெல்லாம் பாகுபாடு செய்து அனுபவிக்கத் தெரிந்த குலேச பாண்டியனோ தன் உள்ளத்தில் எழுந்த பொறாமையின் காரணமாகத் தலையசைக்காமலும், அகமகிழ்ச்சியை முகமலர்ச்சியாகக் காட்டாமலும், எதுவும் சொல்லாமலும் வறிதே இருந்தான். மன்னனது அலட்சியமான போக்கை உணர்ந்த இடைக்காடன் மனம் நொந்தான். கற்றோரால் விரும்பப்படும் தன்மையுடையவன் ஆதலால் அவனுக்கு மான உணர்ச்சி மிகுந்தது. அரசன் முன்னிலையிலிருந்து உடனே எழுந்து சென்று விரைந்து திருக்கோவிலை அடைந்தான்.

சோமசுந்தரப் பெருமான் திருமுன் வீழ்ந்து வணங்கி எழுந்து, மதுரை நாயகமே! பாண்டியன் சொற்சுவை தெரிந்தவன் என்று அறிந்து அவனை நாடிச் சென்றேன், எனது சுவை மலிந்த பனுவலை அவனுக்குப் படித்துக் காட்டினேன், அவன் கொஞ்சமும் தலையசைக்காமல் என் நூலையும் என்னையும் ஒருங்கே அவமதித்தான். எந்தப் பயனும் தர இயலாத அஃறிணைப் பொருளைப் போல் வறிதே இருந்தான். பாண்டிய மன்னன் இகழ்ந்தது எனது சொல்லையோ அல்லது என்னையோ அல்ல சொல்வடிவமான உமாதேவியாரையும், சொல்லின் பொருளான தங்களையுமே இகழ்ந்தான், அதனால் எனக்கு வந்த குறை என்ன? என்று விண்ணப்பம் செய்தான். பின்னர் அடங்காத சினத்தோடு வடக்குத் திசையை நோக்கிச் சென்றான்.

இடைக்காட்டுப்புலவன் கூறிய சொற்கள் சிவ பெருமான் திருச்செவியில் கூரியதாகப் பாய்ந்தன. கருணாமூர்த்தியான சோமசுந்தரப் பெருமான் வெளியேறிச் சென்ற இடைக்காடனுக்கும் அவனது உயிரனைய நண்பனுமான கபிலனுக்கும் மகிழ்வு ஏற்படும் பொருட்டு தமது ஞானமய லிங்கரூபத்தை மறைத்து விட்டு உமாதேவியாரோடும் கிளம்பி வெளிவந்து திருக்கோவிலுக்கு நேர் வடக்கே வைகையாற்றின் தென்பாங்கிலே இனிதாக அமைந்தருளினார்.

மறுநாள் பொழுது புலர வரும் வைகறை யாமத்திலே, திருப்பள்ளியெழுச்சி நேரத்திலே, இறைவனைத் தரிசிக்கப் பல சிவனடியார்கள் வந்தனர். அவர்கள், திருக்கோவிலிலே சிவலிங்கத் திரு உருவத்தைக் காணவில்லை. அடியார்கள் பலரும் பெரிதும் திகைத்தனர். இது என்ன மாயமோ? என்ன அதிசயமோ? என்று சந்தேகமடைந்து வருத்தம் கொண்டனர். இதைப் பாண்டிய மன்னனிடம் தெரிவிக்க வேண்டும் என்று எண்ணி விரைந்து சென்றனர். மதுரை மாநகரமே பொலிவிழந்து நிற்பதையும் கண்டனர். பாண்டியனை அடைந்து மன்னவா! ஒரு செய்தி சொல்ல நாங்கள் மிகவும் பயப்படுகின்றோம். சோமசுந்தரப் பெருமானின் திருப்பள்ளியெழுச்சி தரிசனம் செய்வதற்காகத் திருக்கோவில்

சென்றிருந்தோம்; இன்று சிவலிங்க மூர்த்தியைக் கண்டோமில்லை, என்று நடுங்கியவாறு நாவுலரக் கூறினர்.

சிவனடியார்கள் கூறிய சொல் சுழல் வேல் போலப் பாண்டியனது செவியில் பாய்ந்தது. சிங்காதனத்திலிருந்து அப்படியே திடீரென்று விழுந்தான். உயிர் ஒடுங்கியது போலச் சிறிது நேரம் நிலத்திலே கிடந்தான். பின்னர் நினைவு வந்ததும் எழுந்து தன் இருகைகளையும் தலையின்மேல் கூப்பிய வண்ணம் கண்ணீர் வடித்தான். ஆகையால் அண்ணலே! எம்பெருமானே! எளியேன் என்ன பிழை புரிந்தேன்? எங்கே சென்றீர்? ஐயனே? எங்கு இருக்கிறீர்? கடவுளே ! என்று சொல்லி இரங்கி ஏங்கினான். உடலிலும் உள்ளத்திலும் ஒருங்கே தளர்வெய்தினான். அச்சமயம் சிலர் பாண்டியனிடம் ஓடோடி வந்தனர். வழுதியே! நாங்கள் அதிசயம் ஒன்று கண்டோம். வைகையாற்றின் தென்கரையிலே இன்று வரையிலே இன்று வரை எவரும் காணாத புதுக்காட்சியொன்று கண்டோம். சங்கப் புலவர்களோடும் மீனாட்சியம்மையாரோடும் சோமசுந்தரப் பெருமான் வந்து எழுந்தருளியிருக்கிறார், என்று கூறினார்கள். பாண்டியன் எழுந்தான், பயத்துடன் வேகமாக நடந்து சென்றான். வைகையின் தென்கரையிலே மீனாட்சியம்மையோடு வந்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைக் கண்டான், பேரானந்தம் கொண்டான். இறைவன் திருமுன் கண்ணீர் சொரிந்தவாறு கிடந்தான். பின்னர் எழுந்து நின்று நாத்தடுமாற, பெருமானே! தேவரீர் திருவடி நோவ, மாநகரம் பொலிவிழக்க, தேவியாரோடும் இங்கு வந்து எழுந்தருளிய காரணம் என்னவோ? எளியேன் ஏதேனும் தவறு செய்து விட்டேனோ? என்ன குற்றம் நேர்ந்தது? என்ன பிழை ஏற்பட்டது? ஐயனே! என்ன நிகழ்ந்தது என்பது எளியேனுக்குத் தெரியவில்லையே, என்று விண்ணப்பம் செய்தான்; பின்னர் பலவாறாகப் போற்றி செய்து துதித்துப் பணிந்தான்.

அதுசமயம் சோமசுந்தரப் பெருமானும், வையை வளநாட உன்னுடைய துதிகேட்டு உவகை கொண்டோம்; உன்னுடைய உளமார்ந்த புகழ்ச்சி எமக்கு மிகவும் இனிமையாக உள்ளது; நாம் சொல்வதைக் கேட்பாயாக. ஸ்தலங்கள் அனைத்திலும் திரு ஆலவாயே சிறந்தது. இத்திருத்தலத்திலே எண்ணமுடியாத

சுயம்புலிங்கங்கள் உள்ளன. அவற்றுள்ளே அறுபத்து நான்கு லிங்கங்கள் உயர்வுடையன; ஏனெனில், அவற்றை அஷ்டதிக்கு பாலர்கள் பூசித்தனர். அந்த எட்டுக்குள்ளும் எமது நண்பனாகிய குபேரன் பூசனை புரிந்த லிங்கம் மிகவும் சிறந்ததாகும். இது எம் நண்பன் வழிபட்ட லிங்கம் ஆன படியால் நாமும் இங்கே வந்து எழுந்தருளியுள்ளோம். ஆதலால் இந்த தேவஸ்தானம் வட திருஆலவாய் என்ற சிறப்பினை அடையும்; கடம்பவனத்தை விட்டு யாம் ஒருபோதும் நீங்கியிருக்கமாட்டோம்; வேறு குற்றம் எனவும் நீ செய்து விடவில்லை. இடைக்காட்டுப் புலவன் யாத்த செய்யுட்களை நீ இகழ்ந்தாய், அப்போதே அவனிடம் யாம் வைத்த அன்பின் காரணமாக இங்கு வந்து இருந்தருளினோம், என்று ஆகாசவாணியாக மொழிந்தருளினார்.

வானொலி கேட்டான் பாண்டியன் குலேசன், புராதனனே! புண்ணியனே சிறியேன் செய்த பிழையைப் பொறுத்தருள்வது தேவரீர் கடமை, என்று கூறி வணங்கினான். பெருமான் பாண்டியனுக்கு அருள் புரிந்தார். மீனாட்சி தேவியோடும் சங்கப் புலவர்களோடும் திருக்கோவில் சேர்ந்தருளினார்.

திருக்கோவிலுக்கு மிகுந்த பணிவுடன் நடந்து சென்ற பாண்டிய மன்னன் சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு விடைபெற்றான். பின்னர் சங்கப்புலவர்களுடன் சென்று இடைக்காட்டுப் புலவனைத் தக்க மரியாதையுடன் வரவேற்று அழைத்துக் கொண்டு வந்து தனது அரண்மனை வந்து சேர்ந்தான்.

பின்னர் முறைப்படி நன்கு அலங்கரிக்கப்பட்ட செல்வத் திருமாளிகை ஒன்றிலே இடைக்காடனைப் பொன்னாசனத்திலே அமர்த்தினான் பாண்டியன். புலவர்கள் சூழ வீற்றிருந்து, பலவகைச் சிறப்புகளுக்கிடையே இடைக்காடன் யாத்த செய்யுட்களைக் கேட்டு மகிழ்ந்தான். இடைக்காட்டுப் புலவனுக்கும் சங்கப்புலவர்களுக்கும் பட்டாடைகள், முத்துமாலைகள், யானைகள், குதிரைகள், நன்செய்கள் எல்லாம் பரிசாக நிரம்பக் கொடுத்தான். பின்னர் அவர்களை நோக்கி, புலவர் பெருமக்களே! இடைக்காடனுக்கு எளியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும், என்று வேண்டி வணங்கினான்.

புலவர்களும், சோமசுந்தரப் பெருமானின் திருவருளினாலே உனக்கு அளவில்லாத திருவும் கீர்த்தியும் உண்டாவதாக, என்று ஆசிமொழி இயம்பிச் சென்றனர்.

பல ஆண்டுகள் நல்லாட்சி செய்த பின் குலேச பாண்டியன் தான் செய்த தவப்பயனாக வந்து தோன்றிய தன் அருமைத் திருக்குமாரன் அரிமர்த்தனனுக்கு உலகாட்சியைத் தந்துவிட்டுச் சிவபுரம் சேர்ந்தான்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

28.08.2021 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் திரு. வினைதீர்த்தான் அவர்கள் சிலப்பதிகாரம் - மதுரைக் காண்டம் - கட்டுரை காதை பற்றிச் சொற்பொழிவு ஆற்றினார்.

04.09.2021 அன்று பிற்பகல் சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலைக் கல்வி நிறுவனங்களின் சார்பில் ஆசிரியர் தின விழா நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். முனைவர் குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார்.



## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்